# கல்கி

KALKI 14.5.95 ரூ. 3.00

திகில் ஸ்பெஷல்!

எதைக் கண்டு இந்த திகில்?





# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990
பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை- 600 002.
கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569




### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%**

5 வருடங்கள்
ரூ.50,000/-
அதற்கு மேலும்

PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- ☐ வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- ☐ மாத வட்டி ரூ.1.85 மட்டுமே
- ☐ விரைந்த சேவை.
- ☐ "சென்னை மாநகராட்சி" எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- ☐ குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- ☐ 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- ☐ R.D. கட்டத் தேவையில்லை
- ☐ எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

# பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

சேர்மன்:
**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
ஸ்ரீகந்தக்கோட்டம்,
சென்னை–600 003.
ஆலோசகர்
பார்க் டவுன் பெனிபிட்
பண்டு லிட்.



இயக்குநர்கள் குழு
R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday

# ஜெ. பற்றி எம்.ஜி.ஆர். ஆவி!



ஆவிகளுடன் பேச முடியும் என்ற நம்பிக்கை, இன்று நேற்றல்ல, சரித்திர காலம் தொட்டே பலருக்கு இருந்து வருகிறது. (அமரர் கல்கி, சிவகாமியின் சபதம், பாகம் 4, அத்தியாயம் 13, அகக்கண் காட்சி.)

இன்றைக்கும் "மீடியம்" மூலம் ஆவிகளை அழைத்து நம்முடன் பேசச் செய்யும் ஆற்றல் படைத்தவர்களாகக் கருதப்படுவோர் உள்ளனர். அவர்களில் ஒருவரைப் பிடித்து, ''எம்.ஜி.ஆர். ஆவியுடன் பேச முடியுமா?'' என்று கேட்டோம்.

''முடியும். ஆனால் பாதுகாப்பு கருதி என் பெயர், முகவரி, புகைப்படம் ஏதும் கூடாது'' என்றார். ஒப்புதலளித்தோம்.

சிறிய தனி அறை. "எம்.ஜி.ஆரின் ஆவி இந்த நபரின் உடலுக்குள் வரும்" என்றார். வியத்தகு உடல் மாற்றங்களால் சற்று நேரம் துடித்தபின் அந்த நபர் பேசினார் - அவர் மூலமாக எம்.ஜி.ஆர்.(!)(?)

அவரவர் விருப்பப்படி ஆச்சர்யக்குறி அல்லது கேள்விக்குறி இரண்டில் ஒன்று 'டிக்' செய்து கொள்ளவும். இனி பேட்டி....

**உங்கள் வாரிசு என்று சொல்லிக் கொள்ளும் ஜெயலலிதாவின் தற்போதைய நடவடிக்கைகள் உங்களுக்குத் திருப்தி தருகிறதா?**

எப்போதுமே திருப்தி இல்லை. எனக்குப் பிறகு கட்சியை கவனிக்கச் சரியான ஆட்கள் இல்லாது போய் விடுவார்களோ என்கிற கவலையில்தான் லலிதாவை நான் அரசியலுக்குக் கொண்டு வந்தேன். ஆனால் அது சரியில்லாமல் போய் விட்டது.

**எதிர்க்கட்சிகளால் ஊழல் குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டுள்ள ஜெ. தொடர்ந்து ஆட்சியில் நீடிப்பது குறித்து உங்கள் கருத்து?**

பதவியை விட்டு இறங்கி விடுவதுதான் விவேகம். அவள் மிகவும் குழம்பிப் போயிருக்கிறாள் என்று நினைக்கிறேன். அண்ணா வழியில் கட்டிக் காக்கப்பட்டு வந்த கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டையெல்லாம் இன்று எல்லோரும் விட்டு விட்டார்கள். பேராசை வந்து விட்டது.... ஜெயலலிதா விவரம் புரியாமல் பல சிக்கல்களில் மாட்டிக் கொண்டு விட்டாள். பதவியை விட்டு இறங்கி, பின் சிக்கல்களைச் சமாளிக்க முயல வேண்டும். அதுதான் சரி...

**ஜெயலலிதாவின் தற்போதைய நடவடிக்கைகள், உங்கள் பெயருக்குக் களங்கம் விளைவித்திருப்பதாகக் கருதுகிறீர்களா?**

இப்போதல்ல... அவளை செயலாளராக நான் நியமித்த போதே...

**ஒருவேளை ஜெயலலிதா பதவி விலக மறுத்தால்...**

ஆட்சி கலைக்கப்படணும்னு விரும்பறேன். என் கட்சியின் மதிப்பு போனாலும் சரி... புதுசாக வரட்டும்... நல்லதா வரட்டும். நான் இருந்த வரைக்கும் அண்ணா பேருக்குக் களங்கம் விளைவித்ததில்லை. இன்று என் பெயர் கெட்டுப் போகிறது....

**இன்று கறைபடியாத அரசியல்வாதிகள் யாராவது இங்கு இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்களா?**

இருந்தார்... மூணு மாசம் முன்னாடி வரைக்கும் இருந்தார். ஒருத்தர் இருந்தார்... இப்ப இல்லை. (பெயர் சொல்லவில்லை)

— நமது நிருபர்

**நமக்கெல்லாம் எப்போதாவது ஏற்படும் 'திகில்' அனுபவங்களை தினசரி 'டீல்' பண்ணிக் கொண்டிருப்பவர்கள் போலீஸ்காரர்கள். சென்னை புளியந்தோப்புப் பகுதி இன்ஸ்பெக்டர் ஹ.மு. கஷீப்பின் இந்த திகில் அனுபவம் எந்த தமிழ் சினிமா கிளைமாக்ஸுக்கும் சளைத்ததல்ல! அவரே சொல்கிறார்....**

சப்-இன்ஸ்பெக்டராகத் தேர்வு பெற்று, 1977-ல் சாத்தூர் காவல் நிலையத்தில் பொறுப்பேற்றேன். பத்து கி.மீ. தூரத்தில் இடுக்கன்குடி என்று ஒரு கிராமம். மூன்று பேர் ஒரு ஆளை கொலை செய்து விட்டதாக ஒருநாள் தகவல் வந்தது. உடனே நான், துணை இன்ஸ்பெக்டர் ராமச்சந்திரன், இரண்டு காவலர்கள் ஜீப்பில் கிளம்பி அங்கு சென்றோம். நல்லவேளையாக தாக்கப்பட்ட ஆள் இறக்கவில்லை! உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருந்த அவரைத் தூக்கி



# சதக்!..சரக்!..சதக்!..

ஜீப்பில் போட்டுக் கொண்டு சாத்தூருக்கு விரைந்தோம்.

இடையில் ஒரு ரயில்வே கேட். எங்கள் ஜீப், கேட் மூடப் பட்டதால் ஒரு பக்கம் நின்றது. நான் ஜீப்பிலிருந்து இறங்கி கேட்டை ஒட்டினாற்போல சென்று ரயில் வருகிறதா என்று கவனித்தேன். தூரத்தில் வருவது தெரிந்தது.

இதற்கிடையில் கேட்டுக்கு அந்தப் பக்கம் ஒரே சத்தமாக இருந்தது... கேட்டைக் கடந்து எதிர்ப்பக்கம் போனேன். அந்த இடத்துக்குப் பெயர் பொத்தம்பட்டி. அங்கே ஒருவன் மக்களை பயமுறுத்திக் கொண்டிருந்தான். அவனை எனக்கு முன்பே தெரியும்! மாரிமுத்து. அந்தப் பகுதியிலேயே பெரிய ரவுடி! பொத்தம் பட்டியில் அந்நியர் நுழைவதற்கு அவன் அனுமதி பெற வேண்டும் என்ற அளவுக்கு எல்லோரையும் பயமுறுத்தி வைத்திருந்தான்!

கேட்டைக் கடந்து வந்த என்னைப் பார்த்தவுடன், மாரிமுத்துவுக்குக் கடுமையான கோபம் வந்து, இடுப்பில் செருகி வைத்திருந்த திருப்பாச்சேத்தி அரிவாளைக் கொண்டு தலையைக் குறிவைத்தான்! நல்ல வேளையாக, நான் குனிந்து கொள்ளவே இடது கண்ணின் மேல்புறம் வெட்டு விழுந்தது. ரத்தம் வெள்ளமாக

கன்னத்தில் வடிந்தது!

மாரிமுத்துவின் கூட இருந்தவர்கள் என்னைத் தாக்க ஆரம்பித்தார்கள். என்னிடம் துப்பாக்கி, லத்தி எதுவும் கிடையாது. எங்கள் ஆட்களைக் கூப்பிடலாம் என்று பார்த்தால், அந்தச் சமயம் பார்த்து ரயில் பாதையில் நீளமான சரக்கு ரயில் சென்று கொண்டிருந்தது. கத்தினாலும் அந்தப் பக்கம் கேட்காது.

பொது மக்கள் பயந்து சிதறி ஓடி விட்டார்கள்! 'சரி, நாம் இன்றைக்கு க்ளோஸ்தான்' என்கிற முடிவுக்கு வந்து விட்டேன்.

மாரிமுத்துவின் அரிவாள் கைப்பிடியை கெட்டியாக பிடித்துக் கொண்டேன். கூர்மையான மறுபக்கத்தை அவன் பிடித்துக் கொண்டிருந்தான். நாங்கள் இருவரும் சண்டை போட்டுக் கொண்டே ஒரு பெட்டிக் கடையை ஒட்டிச் சென்று விட்டோம்.

எனக்கு எங்கிருந்துதான் அந்த மனோ பலமும், பளிச் புத்தியும் வந்ததோ தெரியவில்லை... ஒரு கையால் அரிவாளின் பிடியை விடாமல், மற்றொரு கையால் பெட்டிக் கடையில் இருந்த நன்னாரி சர்பத் பாட்டிலை எடுத்து, சவுக்கு கட்டைத் தூணில் அடித்துப் பாதியாக உடைத்தேன். உடைந்த பாதி பாட்டிலை மாரி முத்துவின் வயிற்றில் 'சரக்' கென்று ஏற்றினேன்!

மாரிமுத்து கீழே விழுந்து விட்டான். சரக்கு ரயிலும் சென்று விட, கேட்டுக்கு

# சரக்!... ...

அந்தப் பக்கம், ஜீப்பில் இருந்த ராமசந்திரனும் காவலர்களும் என் உதவிக்கு ஓடி வந்தார்கள்.

அரசு அதிகாரியைக் கொலை செய்ய முயற்சித்ததாக மாரிமுத்து மீது வழக்குப் பதிவு செய்து ஏழு வருடம் உள்ளே தள்ளினோம். இப்போது நினைத்தாலும் சிலிர்ப்பு ஏற்படுத்தும் சம்பவம் இது!

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்

படம் : ராஜன்




●● திகில் சினிமா மன்னரான ஹிட்ச்காக்குக்கு ஒரு தமாஷான பழக்கம் உண்டு.

யாராவது ஒரு நண்பருடன் லிஃப்டில் நுழைவார். உரத்த குரலில், லிஃப்டில் உள்ள அனைவருக்கும் கேட்கும்படியாக 'திரில்' சமாசாரம் எதையாவது சொல்ல ஆரம்பிப்பார். லிஃப்ட் உயர உயர, கதையும் உயரும்.... கிளைமாக்ஸ் வரும்போது, கதையை முடிக்காமல் லிஃப்ட் நின்றவுடன் தம் பாட்டுக்கு வெளியே போய் விடுவார்! சஸ்பென்ஸ் தாங்காமல், கூட வந்தவர்கள் மண்டையை பிய்த்துக் கொள்வார்கள்!

●● நியூயார்க் பத்திரிகையாளர் ஒருவர், "உங்களை திகிலடையச் செய்யும் விஷயங்கள் எவை?" என்று ஹிட்ச்காக்கிடம் கேட்டபோது, "குறும்புக்கார வாண்டுகள், போலீஸ் கார், உயரமான இடங்கள், மற்றும் உங்களின் அடுத்த படம் 'குளோஸ்' என்று யாராவது சொன்னால் போதும் - பயந்து விடுவேன்!" என்றாராம் ஹிட்ச்காக்!

— மௌலி

**கா**லை பத்து மணிக்கு பத்திரிகை ஆபீசில் நாவலை எழுதிக் கொடுக்க வேண்டும் என்று, அதிகாலை மூணரை மணிக்கு எழுந்து, எழுதத் தொடங்கினார் அந்த எழுத்தாளர். கதையின் கிளைமாக்ஸ் பகுதியை எழுதி முடித்த போது, காப்பியுடன் அவர் பக்கத்தில் வந்த அவருடைய மனைவிக்கு பயங்கர ஷாக். எழுத்தாளரின் மூக்கிலிருந்து சொட்டிய ரத்தத் துளிகள், கதைத்தாளில் தெறித்திருந்தன. அந்த எழுத்தாளர் பேய்க் கதை மன்னன் பி.டி. சாமி. நாவலின் பெயர் : அழகியின் ஆவி. கதையில் வந்த திடுக்கிடும் பகுதிகள், எழுதியவரையே திகிலடையச் செய்து விட்டன என்று சொன்னால் படிக்க சுவாரஸ்யமாக இருக்கும். உண்மையில் அவருக்கு உடல்நலக் குறைவு!

இன்றைக்கு பி.டி. சாமிக்கு அறுபத்தி நாலு வயதாகிறது. பிரெயின் டியூமர். ஆபரேஷன் எல்லாம் முடிந்து, தேகம் மெலிந்து, பார்க்கவே பரிதாபமாக இருக்கிறார். ஆனால் இன்றைக்கும் எழுதிக் கொண்டுதான் இருக்கிறார். தினமலருக்கும், ராணிக்கும் என குறைந்தபட்சம் வருடத்துக்கு இரண்டு தொடர்கள்.

மெல்லிய குரலில்தான் பேசுகிறார். நாற்காலியை அவருக்கு வெகு நெருக்கமாய் இழுத்துப் போட்டுக் கொண்டு, காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டு பேசினோம் :

**நா**கர்கோவில்காரர். சொந்த பெயரான பி. தங்கசாமி, பிற்காலத்தில் பி.டி. சாமியானது. இவர் ஏதோ மர்மக் கதைகளும், பேய்க் கதைகளும்தான் எழுதியிருக்கிறார் என நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தால்... ஸாரி. உங்கள் எண்ணம் தவறு. குடும்ப நாவல்களும், நாடகங்களும் நூற்றுக்கணக்கில் எழுதிக் குவித்திருக்கிறார்.

பள்ளிக்கூடத்தில் படித்தபோது, தங்கசாமி ரொம்ப புத்திசாலிப் பையன். எட்டாம் வகுப்பு பொதுத் தேர்வில் அப்போதைய திருவனந்தபுரத்தில் மாவட்ட பர்ஸ்ட். அதனால் கிடைத்த ஸ்காலர்ஷிப். எஸ்.எஸ். எல்.சி.யிலும் முதல் ராங்க்.

அத்துடன் படிப்புக்கு முற்றுப் புள்ளி. குடும்ப வியாபாரத்தில், உதவியாய்ச் சேர்ந்தார். ஒரு சமயம், அண்ணன் தம்பி வாக்குவாதத்தில், அண்ணன் ஏதோ திட்டி விட, இவருக்கு பொத்துக் கொண்டு விட்டது. நேரே பாளையங்கோட்டை போய், எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சில் பதிவு செய்து விட்டு வந்தார்!

இவருடைய அதிருஷ்டம். அடுத்த சில நாட்களில் பாளையங்கோட்டை ஜெயிலில் வேலை கிடைத்து விட்டது.

வேலை கிடைத்த ஜோரில் ஆரம்பித்தது பி.டி. சாமியின் எழுத்துப் பணி. ஜெயில் கைதிகளைக் கொண்டு தாம் எழுதிய நாடகங்களை நடிக்க வைத்தார். கைதிகள் மத்தியிலே பாபுலாரிடி கிடைத்தாலும், ஜெயில் அதிகாரிகள் இதை வரவேற்கவில்லை.

இதற்கிடையே, நெம்பர் ஒன் எழுத்தாளராக வேண்டும். சினிமாவில் நுழைய வேண்டும். பேரும், புகழும் பெற வேண்டும் என்ற வெறி நாளுக்கு நாள் அதிகமாக, ஒருநாள் தம் ஜெயில் உத்தியோகத்துக்கு கால் கடுதாசி எழுதிக் கொடுத்து விட்டு, மெட்ராசுக்கு வண்ணக் கனவுகளுடன் ரயிலேறி விட்டார்.

"அவசரப்பட்டு வேலையை ராஜினாமா செய்தது எத்தனை தவறு என்று என் பிற்கால கஷ்டங்கள் எனக்கு உணர்த்தின. எப்படியாவது, மெட்ராசுக்கு வேலையை மாற்றிக் கொண்டு வந்திருந்தால் கஷ்ட ஜீவனத்தைத் தவிர்த்திருக்கலாம்" என்று கூறுகிறார் பி.டி.சாமி.

நாவல்கள் எழுதி, பத்திரிகைகளுக்குக்



• பி.டி. சாமி



இல்லாத

கொடுப்பது, சினிமா கம்பெனிகளுக்கு நடையாய் நடந்து கதை எழுதித் தர வாய்ப்புக் கேட்பது என்று அலைந்த நாட்கள் பல.

"விடிய விடிய உட்கார்ந்து காடா விளக்கில் முந்நூறு பக்கங்கள் கதை எழுதிக் கொண்டு போய்க் கொடுத்தால், அதை வாங்கிக் கொண்டு, ஐந்து ரூபாய் கொடுப்பார்கள். இவர், பஸ் சார்ஜ் கூட அனாவசிய செலவு என்று, பத்திரிகை ஆபீசுக்கு, நடந்தே போய் வருவார்" என்கிறார் சாமியின் திருமதி.

**அட்டைப்பட விளக்கம் :**

**பா**லன் ஸ்டுடியோவில், சுரேஷ் கோபியுடன் நடித்துக் கொண்டிருந்த [ஏதோ மலையாளப்படம்.] கீதாவிடம் "சில திடுக்கிடும் சம்பவங்கள் சொல்கிறோம்; கேட்கிறீர்களா?" என்றோம்.

'ஆஹா, அதற்கென்ன' என்று ஜாலியாக முன்வந்தவர், நாம் சொல்லச் சொல்ல, அரண்டு, மிரண்டு, வியர்த்துப் போய் விட்டார்.

அட்டையில் நீங்கள் காண்பது திகிலடைந்த கீதாவை.

36-ம் பக்கத்தில் காணப்போவது அவரை திகிலடையச் செய்த சம்பவங்களை.

அட்டை வண்ணப்படம் : கேமரா திருஞானம்

# பேய்களில் நம்பிக்கை பேய்க்கதை மன்னன்!

**நா**டகம் மூலம் பிரபலமானால், அது சினிமாவுக்குள் நுழைய வழிவகுத்துத் தரும் என்று கருதிய பி.டி. சாமி, நிறைய நாடகங்கள் எழுதத் தொடங்கினார். அவற்றைப் பல நாடகக் குழுக்களுக்கும் கொடுத்து, அரங்கேற்றினார். நாடகங்கள் அனைத்துமே மிகுந்த வரவேற்பைப் பெற்றன. தமிழகம் முழுக்க நடந்து கொண்டிருந்த பொருட் காட்சிகளில், இவரது நாடகங்கள் இல்லாமலிருக்காது.

"ஸ்கிரிப்ட்டை வாங்கிக் கொள்ளும் போது, ஏதாவது ஒரு சிறு தொகையைக் கொடுப்பதோடு சரி. இவரது நாடகங்களைப் போட்டுப் பிரபலமானவர்கள், பணம் சம்பாதித்தவர்களைப் பெரிய பட்டியல் போடலாம். ஆனால் ராயல்டி மட்டும் வராது" என்று திருமதி சாமி இடைமறித்துச் சொல்லும் போது, அவரது குரலில் சோகம் இழையோடுகிறது.

"சில்லறையாய்த் துவங்கிய சினிமா வாய்ப்புகள், ஓரளவுக்கு அதிகரித்தன என்றாலும், பணம் ஓகோவென்று குவியவில்லை; ஆனாலும் கஷ்ட ஜீவனமில்லை" என்கிறார் சாமி.

"என்னிடம் கதை கேட்ட சினிமாக்காரர்களை விட, எனக்குத் தெரியாமலேயே, என் கதையின் முடிச்சுகளை எடுத்துக் கொண்டவர்கள் ஏராளம். "கதை திருடியதாய் யார் மீதும் கேஸ் போடக் கூடாது" என்பது என்னுடைய கொள்கை. காரணம், அது, மேலும் வரக்கூடிய வாய்ப்புகளைத் தடுத்து விடும் என்று நான் நினைத்தேன்."

சொந்தத்தில் சினிமா தயாரிக்க முயன்று நஷ்டப்பட்டபின் புத்தகங்கள் வெளியிட ஆரம்பித்தார். "முதல் புத்தகமாய் பரமாச்சாரியார் பற்றி நாகர் கோவில் கிருஷ்ணன் எழுதிய புத்தகத்தை வெளியிட்டேன். புத்தகம் அமோகமாய் விற்றது. அந்த ராசிதானோ என்னவோ, இதுவரை நான் எழுதியது தவிர, வேறு பலர் எழுதியதையும் சேர்த்து, இரண்டாயிரம் புத்தகங்கள் வெளியிட்டு விட்டேன். என் பிரசுரங்கள்தான் என் வாழ்க்கை சௌகரியத்துக்கு மூல காரணம்" என்கிறார் சாமி.

**இ**ன்றைக்கும், காலை நாலு மணிக்குடான் என்று எழுந்து, ஒரு சொம்பு பச்சைத் தண்ணீரைக் குடித்து விட்டு, எழுதத் துவங்கி விடுகிறார் பி.டி. சாமி. எட்டு மணி வரை எழுத்து. இடையே ஒரு டீ. காலை, மாலை தவறாமல் வாக்கிங்.

"ஆங்கில நாவல் படித்ததில்லை; இங்கிலீஷ் படங்கள் பார்த்ததில்லை. என் எழுத்துக்கள் அனைத்தும், நூற்றுக்கு நூறு சதவீத ஒரிஜினல் கற்பனைதான்" என்கிறார் பேய், பிசாசு மீதெல்லாம் நம்பிக்கை இல்லாத இந்த பேய்க் கதை மன்னன்!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

**நடந்து முடிந்த தமிழக சட்டமன்றக் கூட்டத் தொடர், எதிர்க் கட்சியினருக்கு எப்படியிருந்தது? விளக்குகிறார்கள் இரண்டு எதிர்க்கட்சி எம்.எல்.ஏக்கள்....**

சட்டமன்றம்) புரட்சித் தலைவி கவசம், ஆதிபராசக்தி நாமாவளி ஆகியவை மட்டுமே சபைக் குறிப்பில் ஏறத் தகுதி பெற்றவை என்று ஆகிவிட்ட சூழ்நிலையில் எதிர்க்கட்சியினர் 'குய்யோ முறையோ' என்றடித்துக் கொண்டு வாயில் கறுப்புத் துணிதான் கட்டிக் கொள்ள வேண்டியதாயிற்று. அதையும் ஆட்டோ சங்கர் தூக்கிலிடப்பட்டதற்குத் துக்கம் அனுஷ்டிப்பதாக ஓர் அநாகரிக நையாண்டி செய்தனர் ஆளுங்கட்சியினர்.


• பரிதி


• எஸ்.ஆர்.பி.

"எப்படி சொல்வது என்றே தெரியவில்லை. எந்தப் பிரச்னையானாலும் சரி, நாம் பேசத் துவங்கியதுமே, நாலைந்து அமைச்சர்கள் குறுக்கீடு செய்றொர்கள். உச்சகட்டமாக முதல்வர் குறுக்கிட்டு உரை நிகழ்த்துகிறார். இந்த நிலையில் நமக்குக் கொடுக்கப்பட்ட நேரம் முடிந்து விடுகிறது. ஆனால் அமைச்சர்கள் பேசும்போது நாம் குறுக்கிட்டால் 'அமைச்சர் பேசும் போது குறுக்கிடக் கூடாது' என்று அடக்கி விடுகின்றனர். என் தொகுதியைச்

# சேடப்பட்டி ராஜ்ஜியத்தில்...

சேர்ந்த பெண்மணியை ஆளும் கட்சியினர் தாக்கியது குறித்து என்னைப் பேசவே விடாமல் தடுத்தது மட்டுமல்லாமல், சபையை விட்டு வெளியேற்றி விட்டனர். போதாததற்கு இந்தச் சபாநாயகர், சபையில் பதில் சொல்ல வாய்ப்பில்லாதவர்களைத் தாக்கிப் பேசுகிறார். எங்கள் தலைவர் கலைஞர் பற்றி அவதூறாகப் பேசுகிறார். நான் திருப்பி பதில் சொன்னால் சபைக் குறிப்பில் ஏறாது" என்று சொல்கிறார் தி.மு.க. உறுப்பினர் பரிதி இளம் வழுதி. இந்த பட்ஜெட் கூட்டத் தொடரில் இரண்டு முறை வெளியேற்றப்பட்டதால் நடப்பு கூட்டத் தொடர் முடிய நீக்கப்பட்ட நிலை பெற்றவர் இவர்.

"அப்பரும், சுந்தரரும்
வாசகரும்
இப் புவியில் செய்திட்ட
இறைப்பணி அப்படியே
தொடர்பெற
அன்புத் தாயைக் கண்ட,
இப்பிறவி மக்கள் செய்த
புண்ணியமே!"

- இது ஒன்றும் பிதற்றல் அல்ல! புரட்சித் தலைவியைக் குறித்து அவரது சிஷ்ய கோடிகளில் ஒருவர் அருளிச் செய்த ஜெயாஷ்டோத்திரத்தின் ஒரு பகுதி. சேடப்பட்டியாரின் ராஜ்ஜியத்தில் 'அது தான்

இவர் மட்டுமல்ல, எம்.ஜி.ஆர். அண்ணா தி.மு.க. உறுப்பினர் திருநாவுக்கரசுவும் இரண்டு முறை நீக்கப்பட்டிருக்கிறார். எதிர்க்கட்சித் தலைவர் எஸ்.ஆர்.பி. உட்பட காங்கிரஸ் உறுப்பினர்கள் பீட்டர் அல்போன்ஸ், அழ [illegible]. பி.வி. ராஜேந்திரன்.



ஞானசேகரன், ரங்கனாதன், குமாரதாஸ், பன்னீர்செல்வம் ஆகியோரும் இரண்டு முறை வெளியேற்றப்பட்டு 'தள்ளி'வைக்கப் பட்டார்கள்.

இந்தப் பிரச்னையையெல்லாம் சந்திக்க வேண்டாம் என்றோ என்னவோ பண்ருட்டி சபைக்கு வருவதேயில்லை. ம.தி.மு.க. செல்வராஜ் இயல்பாகவே கொஞ்சம் அடக்கி வாசிப்பவர்; சமத்து பிள்ளையாகி இருக்கிறார். சட்டசபையில் மிதவாதிகளாகச் செயல்பட்டு, வெளியேற்றப்படாமல் கருத்துக்களைச் சொல்லிக் கொண்டிருந்தவர்கள் இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளைச் சேர்ந்த பழனிசாமியும், தம்புசாமியும்.

இந்த பட்ஜெட் கூட்டத் தொடரில் குறிப்பிடத் தக்க விஷயம், இரண்டு முறை, காங்கிரஸ் உறுப்பினர்கள் சட்டசபையில் பேச வாய்ப்புக் கிடைக்காத நிலையில் தெருவுக்கு வந்து மறியல் செய்தது, எஸ்.ஆர்.பி. சபைக் காவலர்களால் செல்லமாகத் தாக்கப்பட்டு ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றது. சபாநாயகர் விஸ்வநாதனையும், அழகு திருநாவுக்கரசுவையும் நீக்கிய உத்தரவுக்கு உயர்நீதிமன்றம் இடைக்காலத் தடைசெய்தது. அரசியல் சட்டநெறிகளையும் மீறி அவர்களை திருப்பி அழைக்கத் தீர்மானம் போட்டது. தவிர, தாக்கும் ஆளும் கட்சி உறுப்பினர்கள் மீது நடவடிக்கை எடுக்காமல், தாக்கப்பட்ட உறுப்பினர்கள் மீது நடவடிக்கை எடுப்பது விசித்திரமான நிலை.

"மே தினத்தன்று தூத்துக்குடியில் அ.தி.மு.கவினர் பிரதமர் நரசிம்மராவ் கொடும்பாவிகளைக் கொளுத்தியபோது போலீஸ் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. இதைக் கண்டித்துப் பேச முயன்ற போது, என்னைப் பேசவே விடாமல் செய்ததோடு மட்டுமல்லாமல் பிரதமரை 'செயலற்ற பிரதமர்' என்று முதல்வரும் வர்ணித்தார். இதைத் தட்டிக் கேட்ட எங்கள் கட்சி ஞானசேகரனை தூத்துக்குடி அ.தி.மு.க. உறுப்பினர் ரமேஷ் தாக்கினார். கடைசியில் தாக்கிய ரமேஷை விட்டு விட்டு, ஞானசேகரன் மற்றும் எங்கள் கட்சியைச் சேர்ந்த மூன்று பேர் மீது சபாநாயகர் நடவடிக்கை எடுத்தார். இது எந்த விதத்தில் நியாயம் என்று தெரியவில்லை. மூத்த உறுப்பினர் பொன்னம்மாளை ஆளும் கட்சி உறுப்பினர் கவிநிலவு தாக்க வந்ததைக் கூட சபாநாயகர் 'கண்டிக்கவில்லை. இந்த சட்டசபையில் ஜனநாயக ரீதியாக நாங்கள் செயல்பட முடியாததால்தான் கூட்டத் தொடர் முழுவதும் கலந்து கொள்வதில்லை என்று முடிவு செய்தோம்!" என்கிறார் சட்டமன்றக் காங்கிரஸ் துணைத் தலைவரான டேனியல் ராஜ்.

— ப்ரியன்




1995 மே 14
யுவ சித்திரை 31
மலர் : 53
இதழ் : 41

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.




# என்.டி.ஆரின் தடுமாற்றம்!

எப்படியாவது தேசிய முன்னணியில் 'ஜெ'யை சேர்த்துக் கொண்டு விட்டால் எவ்வாறேனும் தமக்குப் பிரதமர் பதவி கூடக் கிடைத்து விடும் என்பது என்.டி.ஆரின் குருட்டு நம்பிக்கை! இதனால்தான் 'ஏன், அடுத்த பிரதமராகும் தகுதி எனக்கில்லையா?' என்று கூட அவர் நிருபர்களிடம் கேட்டிருக்கிறார். ஆசை இருந்து விட்டுப் போகட்டும்; அதற்காக 'ஜெ'யை குஷிப்படுத்த அவர் அசட்டு வாதங்களை முன் வைக்க வேண்டாம். 'மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர் முதல்வர்; ஆளுனரோ நியமிக்கப்பட்டவர்; ஆக நியமிக்கப்பட்டவர், தேர்ந்தெடுக்கப்பட்டவர் மீது வழக்குத் தொடர அனுமதி அளிப்பது ஜனநாயக விரோதமானது' என்பது என்.டி.ஆரின் வாதம். சிறிது யோசித்தால் இது ஏமாற்று வாதம் என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம். ஆளுனர் நியமிக்கப்படுகிறார் என்பது உண்மைதான். ஆனால் நியமிப்பவர்கள் யார்? மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதமரும் மக்கள் பிரதிநிதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசுத் தலைவரும் சேர்ந்துதான் நியமிக்கிறார்கள். ஆக மொத்தம், ஆளுனரும் மக்களிடமிருந்தேதான் அதிகாரங்களைப் பெறுகிறார். நியமனமானவர்கள் அதிகாரங்களைப் பயன்படுத்தக் கூடாது எனில், முதல்வர்களால் நியமிக்கப்படும்




கலெக்டர்களும் இதர அதிகாரிகளும் ஈ ஒட்டுவதற்கா சம்பளம் பெற முடியும்? மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்ன அக்கிரமம் செய்தாலும் தட்டிக் கேட்க ஆளில்லாத நிலை நல்ல ஜனநாயகம் ஆகுமா?

'எப்பேற்பட்ட தலைவரும் சட்டத்துக்கு அப்பாற்பட்டவரல்ல' என்பது நமது அரசியல் சாசனம். எனவேதான் ஆலோசனைகள் கேட்கவும் கூறவும்; தவறுகளைத் திருத்தவும் தட்டிக் கேட்கவும் ஒவ்வொரு முக்கிய நிலையிலும் வசதிகள் செய்யப்பட்டுள்ளன. இதனை checks and balances என்பர். இதையெல்லாம் அலட்சியம் செய்து விட்டு, அதிகார போதை தலைக்கேறி நடந்து கொள்பவர் ஏதேனும் ஒரு கட்டத்தில் மாட்டிக் கொண்டு முழிக்கவே நேரிடும்.

## பந்த்: இரட்டிப்பு வெற்றி!

தற்போதைய பந்த், 'ஊழல் குற்றச்சாட்டுக்கு உள்ளாகியிருக்கும் ஜெ. ராஜினாமா செய்ய வேண்டும்' என்பதை முதல் நோக்கமாகக் கொண்டிருந்தது. அந்தத் துணிவு 'ஜெ'க்கு இல்லை. வழக்கைச் சந்தித்தால் அதில் வெற்றி பெற முடியாது என்ற அச்சம் ஒருபுறம்; ராஜினாமா செய்தால் மறுபடி தமது கட்சிக்காரர்களிடமே மதிப்பைத் திரும்பப் பெற முடியாது என்ற பயம் மறுபுறம் என நெருக்க, பதவியில் ஒட்டிக் கொண்டு, சட்டத்தின் சந்து பொந்துகளில்




நுழைந்து தப்பப் பார்க்கிறார்.

இந்த நிலையில் பந்த் வெற்றி பெற்றால் அது, மக்கள் மன்றத்தில் தமக்குப் பெரிய தலைகுனிவாகிப் போகும் என்ற கூடுதல் பீதி தோன்றிவிட, அடக்கு முறையைக் கையாண்டு பந்த்தை முறிக்கப் பார்த்தார் ஜெ. 'சட்ட ஒழுங்கு சீர்குலைவுக்குச் சூழ்ச்சி செய்து, ஆட்சியைக் கலைக்க சதி செய்கிறார்கள்' என்ற சால்ஜாப்பைக் கூறி, தமிழகம் மொத்தத்தையுமே சிறைச்சாலையாக்கி விட்டார்! கணக்கு வழக்கு இன்றி 30,000க்கும் அதிகமானவர்கள் பல நாட்கள் முன்னதாகவே கைதாக, சிறைகள் நிரம்பி வழிந்தன.

இவ்வாறு 'ஜெ'யின் நடுக்கத்தை வெளிச்சம் போட்டுக் காட்டி விட்டதால் பந்த், நடப்பதற்கு முன்பே தன் நோக்கத்தில் வெற்றி பெற்று விட்டது!

அது மட்டுமின்றி, பந்தும் வெற்றி பெற்று விட்டது. அரசு பஸ்களைப் பயணிகள் இன்றி அரைகுறையாக ஓட விட்டு, அரசு அலுவலகங்களைக் கொட்டாவி விடத் திறந்து வைத்து விட்டதால், 'பந்தை முறியடித்து விட்டோம்' என்ற ஜெ.யின் வாதம் எடுபடாது. விற்பனை வரி அதிகாரிகளை ஏவி மிரட்டியும் கூட உணவு விடுதிகள் தவிர, அத்தனை கடைகளும் மூடப்பட்டேயிருந்தன. தொழிலகங்களும் இயங்கவில்லை. வீதிகள் வெறிச். ஆக, பந்த் இரட்டிப்பு வெற்றி பெற்றுள்ளது.

ஆனால் "சர்வாதிகார டீவி" விரிக்கும் கற்பனைக் காட்சிகளில் மூழ்கிக் கிடக்கும் ஜெ. இந்த நிஜங்களை உணர மாட்டார்!

**விக்கிரவாண்டி ரவிச்சந்திரன், சென்னை ஆவியுலக ஆராய்ச்சி மையத்தின் தலைவர். தவிர, 'பேசும் ஆவிகள்' என்று முற்றிலும் ஆவி உலகம் சம்பந்தமான இதழ் ஒன்று நடத்துகிறார். நிஜமாகவே ஆவிகள் உண்டா? அவற்றுடன் பேசுவது சாத்தியமா? - என்பது போன்ற நமது பல சந்தேகங்களை வி.வா. ரவிச்சந்திரன் முன் வைத்தோம். அவர் பதில்களை ஏற்பதும் எற்காததும் உங்கள் இஷ்டம். Afterall, ஆவிகளால் நாம் ஆளப்படவில்லை பாருங்கள்!**

# ஆவிகளின் அன்பர்!

**"ஆவி விஷயத்தில் உங்களுக்கு ஈடுபாடு ஏற்படக் காரணமென்ன?"**

"1973 ல் என் தாத்தா இறந்து போனார். அவர் இறக்கும் சமயத்தில் நான் அவர் பக்கத்திலேயே இருந்தேன். இதுதான் மரணமான்னு நினைச்சேன். வந்திருந்தவங்களிலே ஒருத்தர் ஆவியோடு பேசலாம்னு குறிப்பிட்டார். உடனே மனத்தில் ஒரு குறுகுறுப்பு. தாத்தாவின் ஆவியோடு பேச முயற்சிகள் எடுத்துக்கிட்டேன். பேச முடிஞ்சது. அதுக்கப்புறம் 22 வருடங்களாக இந்தத் துறையிலே ஆழ இறங்கிட்டேன்."

**"ஆவிகள் எப்படி இருக்கும்? அம்புலிமாமா ஓவியங்களில் வருகிற மாதிரியா?"**

"உயிரோடு இருக்கும் போது எப்படி இருந்தாங்களோ, அதே மாதிரிதான் அவங்களோட ஆவியும் இருக்கும். ஆனால் உடல் முழுவதுமே நல்ல வெண்மையாக, கண் கூசுமளவுக்கு ஒளிரும். இப்படி நான் சொல்வது நல்ல ஆவிகளை - அதாவது புண்ணிய லோகத்திலிருக்கும் ஆவி என்போம். ஆனால் பாவாத்மாவின் ஆவி கறுப்பு மற்றும் சாம்பல் வண்ணத்தில் இருக்கும்."

**"ஆவிகளோடு பேசுவதென்பது சுலபமான விஷயமா?"**

"இல்லை. இதற்கு நிறைய பயிற்சி வேண்டும். தகுந்த இடம், பிரார்த்தனை, மனதை ஒருமுகப்படுத்தும் தன்மை, விளையாட்டுத்தனமில்லாத அணுகுமுறை இதெல்லாம் தேவை. தவிர இதில் ஈடுபடும் ஒவ்வொருவருக்கும் 'வழிகாட்டும் ஆவி' (Guiding Spirit) என்று ஒன்று உண்டு. அது பல நன்மைகளைச் செய்வதுடன், நம்மிடம் வர மறுக்கும் அல்லது தயங்கும் மற்ற ஆவிகளுடனும் பேச உதவும்."

**"இப்படி ஆவிகளுடன் பேசுவதால் என்ன நன்மை?"**

"வாழ்க்கைக்குத் தேவையான பல அறிவுரைகளை ஆவி கூறும். கடும் நோய்களைக் கூட சில ஆவிகள்



குணமாக்கியிருக்கின்றன. வருங்காலத்தில் நடக்கப் போவது என்ன என்பதைக் கூட ஆவிகளால் கூற முடியும்."

**"அப்படியானால் ஆவி என்பது கிட்டத்தட்ட கடவுள் போலவா?"**

"அப்படியில்லை. நம்மைவிட அதிக சக்திகள் வாய்ந்தவை. அவ்வளவுதான்."

**"விபத்து, தற்கொலை போன்ற இயற்கையல்லாத மரணம் அடைந்தவர்கள்தான் ஆவிகளாக அலைவார்களா?"**

"ஒருவர் தலை விதிப்படி எப்போது அவர் காலம் முடியும் என்றிருக்கிறதோ அப்போதுதான் அவர் இறப்பார். இறந்ததும் கொஞ்ச காலம் - சில மாதங்களோ சில வருடங்களோ - ஆவியாக உலவி விட்டுப் பிறகு அவர் மறுபிறவி எடுப்பார். உலக அளவில் நடைபெற்ற ஆவி ஆராய்ச்சிகளும் இதைத்தான் சுட்டிக் காட்டுகின்றன. சில ஆவிகள் மிக நீண்ட காலத்துக்கு உலவிக் கொண்டிருப்பதும் உண்டு. அப்படித்தான் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன் வாழ்ந்த எகிப்திய இளவரசனின் ஆவியோடு சமீபத்தில் பேசினார்கள்."

**"ஆவி என்றவுடனேயே மாந்திரீகம், சுடுகாடு, குண்டூசியால் குத்தப்படும் பொம்மை - இப்படி பயமுறுத்தும் விஷயங்கள்தானே நினைவுக்கு வருகின்றன."**

"கதைகளிலும், சினிமாக்களிலும் இவை மிகைப்படுத்தப்பட்டிருக்கின்றன. என்றாலும் இவற்றில் உண்மை இல்லாமல் இல்லை. மாந்திரீக முறையில் கெட்ட ஆவிகளைப் பயன்படுத்த முடியும். ஏவல் என்பது இதுதான். இந்த வகை ஆவிகள் வியாதியை உண்டாக்கலாம். கணவன்-மனைவிக்கு நடுவே பிளவை உண்டாக்கலாம். நாம் என்ன செய்ய நினைக்கிறோமோ அதற்கு நேரெதிராகச் செய்ய வைக்கலாம். ஆனால் நாங்கள் சாத்வீக வழியில் நல்ல ஆவிகளையே நாடுகிறோம்."



• வெள்ளை ஆவியின் போட்டோ.... தெரிகிறதா?

**"ஆவி விஷயமெல்லாம் ஏமாற்று என்று நினைப்பவர்கள் பலர் உண்டு. இப்படியிருக்க விஞ்ஞானபூர்வமாக இந்த ஆவித் தொடர்புகளை நிரூபிக்க ஏன் நீங்கள் முயற்சிகள் எடுத்துக் கொள்ளவில்லை?"**

"இதற்கு நிறைய நிதி உதவி வேண்டும். தவிர பல்கலைக் கழகமொன்றின் ஆதரவும் வேண்டும். 'பாரா-சைகாலஜி' துறை ஒன்று இயங்கினால்தானே விஞ்ஞான ஆராய்ச்சிகளைச் செய்ய முடியும்? அமெரிக்காவிலும், ஜெர்மனியிலும் இதற்கென பல்கலைக்கழகங்கள் உண்டு. ஆனால் அவர்கள் நம் ஆய்வுகளுக்கு உதவ மறுக்கிறார்கள். இங்கும் ஒரு பல்கலைக்கழகத்தின் அங்கீகாரம் இந்த ஆராய்ச்சிகளுக்கு இருந்தால், அதன் மூலம் வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்களுடன் தொடர்பு கொண்டு ஆராய்ச்சி செய்வது சுலபமாக இருக்கும்.

— குல்லூ

# திகில் ஜோக்ஸ்!





''என்ன இன்று பேய்கள் ஊர்வலம் நடத்து துங்க?''
''புளியமர காண்டிராக் டில் ஏகப்பட்ட ஊழலாம்.''




''உன் பிடுங்கல் தாங்காமத்தானே தற்கொலை பண்ணிக்கிட்டேன். அதுக்குள்ள நீயும் இங்க வந்து தொலைச்சிட்டியா?''




டி. என். சேஷனிடம் :
நான்தான் வேலூர் எட்டாவது வார்டு, நாலாவது தெரு, மூணாவது வீட்டு ராமசாமி. நான் செத்து பதினாறு வருஷமாவுது! இன்னும் என் வோட்டை யாராவது போட்டுக்கிட்டுத்தான் இருக்காங்க! நீங்க உடனடியா நடவடிக்கை எடுக்கணும்!




"ஹையா! இனிமே ஜாலியா பொழுது போயிடும்! பேய் டி.வின்னு நமக்காக ஸ்பெஷல் சானல் ஒன்னு வரப்போவு தாம்!"




போஸ்ட்மேன் பேய் :
இந்தாங்க... ஆவி உலகம் பத்திரிகைக்கு நீங்க அனுப்பிச்ச கதை திரும்ப வந்திருக்கு!




"இத்தனை திகிலான படத்தை எப்படி சார் உங்களால எடுக்க முடிஞ்சது?"
"நான் உயிரோடு இருக்கும்போதே இப்படி ஒரு படம் எடுக்கணும்னு நினைச் சேன். முடியலை. இப்பத்தான் முடிஞ் சது."

# Kalki Shopping Page

STEP IN FOR
Raymond's
DIGJAM
SUITINGS & SHIRTINGS

NEWLOOK TAILORS

WE ACCEPT CREDIT CARDS

Opp.: T. Nagar Bus Terminus
Madras - 17. Phone : 434 34 48
NO BRANCHES
We specialise in Bridegroom's dress to make the bride proud.



ADYAR
STUDENTS XEROX

*Quality that is close to perfection*

XEROX
LASER PRINTING
WORD PROCESSING
DTP
ELECTRONIC &
MANUAL TYPING
BINDING &
LAMINATION

ஸ்ரீராமபிரானுக்குப் பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் மண் சுமந்தது. உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவமுடியும்.

## நடராஜ் ஃபைனான்ஸ்

இந்நன்நாளில் அனைவர் இல்லங்களிலும் செல்வம் செழிக்க ஸ்ரீநடராஜ பெருமானையும், ஸ்ரீராமபிரானையும் பிரார்த்திக்கிறோம்.

**புத்தாண்டு சிறப்புப்பரிசு** (சித்திரை, வைகாசி வரை)

டெபாஸிட் ரூ. 10,000 ❑ கால அளவு 12 மாதங்கள்
ஸ்பெஷல் பரிசு 1 கிராம் தங்கக்காசு (22காரட்)
வழக்கமான பரிசு 4% +1% ❑ வட்டி 24% P.A.

90 நாட்கள் | 6 மாதம் | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம்

90 நாட்களுக்கு ஒருமுறை ரினிவல் வசதி ✱ ஒவ்வொரு ரினிவலுக்கும் பரிசு அசலுக்கும், வட்டிக்கும் 'செக்' ✱ சீட்டு குரூப்பில் கடன் வசதி ✱ 36 மாதங்களுக்கு ரூ. 12000 டெபாஸிட் செய்து 3 சவரன் தங்கம் பெறும் திட்டம் ✱ 3 ஆண்டுகளில் இரட்டிப்பு டெபாஸிட் திட்டம் ✱ நடராஜன் என்ற பெயர் உள்ளவர்களுக்கு 1 கிராம் தங்கம் அதிகம் பெறும் ஐயாயிரம் டெபாஸிட் திட்டம்.

CALL 4342098, 4840150




NATARAJ FINANCE & INVESTMENTS,
NATARAJ CHITS (TAMILNADU) PVT., LTD.
NATARAJ ESTATES - FARM HOUSE PROMOTERS,
"Shanthi Complex", 3rd Floor, 26-Ranganathan St.,
T.Nagar, Madras - 600 017. B.O. KANCHEEPURAM - 1

★ சீட்டுநிதி ★ ஆயில்மில்ஸ் ★ ஏற்றுமதி ★ பார்ம் ஹவுஸ் ★ பப்ளிகேஷன்ஸ் ★
நாட்டுப் பணியிலும் நாட்டம் உள்ளவர்கள்

# திகில் கதைப் பிராணிகள்!

திகில் கதை என்றால் போதும், ஆந்தையின் அலறல் எங்கோ கேட்பதும், கோட்டானின் கூக்குரல் காதில் வந்து அறைவதும் இல்லாமல் கதையே நகராது. உண்மையில் நம்மில் பலர் நினைத்துக் கொண்டிருப்பது போல் இவை ஆபத்தானவை இல்லை. ஆந்தை, கோட்டான் போன்ற சில வகை விலங்குகளை, 'நாக்டர்னல் க்ரீச்சர்ஸ்' என்பார்கள். அதாவது இரவு நேரத்தில் மட்டுமே இவை சுறுசுறுப்பாக இயங்கும். எப்படி?

## ஆந்தை :

ஆந்தையில் பல வகை உண்டு. சில மீன், நண்டு போன்றவற்றோடு தங்கள் உணவை முடித்துக் கொள்ளும் 'செமி வெஜிடேரியன்கள்'. மற்றவையோ, சிறு விலங்குகள் மற்றும் பாம்புக்காக மூக்கைத் நீட்டிக் கொண்டு அலைபவை. ஆந்தையின் உருண்டைக் கண்கள் சிறிய சலனத்தைக் கூட உணரக்கூடியவை. இரவு நெருங்க நெருங்க கண்களில் ஒரு கூடுதல் ஒளி. ஆந்தைக்குக் காதுகளும் வெகு கூர்மை. தவிர இதன் இறக்கைகள் பெரிய வட்டமான சிறகுகளைக் கொண்டிருப்பதால், பறக்கும் போது அதிக சப்தம் எழுப்புவதில்லை. இதனால் இரையைப் பிடித்து 'லபக்'கிக் கொள்ள ரொம்ப சௌகரியம்.

ஆந்தை இரவில் ஒலியை எழுப்புவதின் நோக்கம், நம் 'ரத்தத்தை உறைய வைக்க' அல்ல. ஒரு ஆந்தை மற்றொன்றுடன் செய்தி பரிமாறிக் கொள்ளவே அப்படி சப்தத்தை எழுப்புகிறது. மற்றபடி ஆந்தை ரொம்ப சாது. ஆபத்து என்று தெரிந்தால் இறக்கைகளைப் பெரிதாக விரித்துக் கொள்ளும்; இறகுகள் எல்லாம் குத்திட்டு நிற்கும்.

சர்வதேச விலங்கியல் அறிஞர் ஜான் ஜேம்ஸ் அடுபான் ஆந்தைக்குக் கொடுக்கும் சான்றிதழ் இது.

"நான் பார்த்த வரையில் ஆந்தை மனிதர்களை எந்தவிதத்திலும் துன்புறுத்தியதாகத் தெரியவில்லை. மிகப் பெரிய ஆபத்து தன்னைச் சூழ்ந்து கொண்டால் மட்டுமே அலகால் குத்தவோ கால்களால் தாக்கவோ செய்கிறது!"

ஆந்தையின் தன்மைகளை விளக்கும் வகையில் மேலே குறிப்பிடப்பட்டவை கோட்டானுக்கும் பொருந்தும்.



• ஆந்தை

## வௌவால் :

கொலை வெறி, ரத்தவெறி பிடித்த மனிதர்கள் வௌவால் வடிவத்தை எடுப்பது போல் ஹிட்ச்காக் போன்ற இயக்குனர்கள் காட்டியிருக்கிறார்கள். வெறும் கற்பனை. ஆனால் 'வேம்பயர் வௌவால்' என்ற ஒரு வகை வௌவால் ஆடு, மாடுகளின் ரத்தத்தைக் குடிப்பதுண்டு. இவற்றைத்தான் நாம் 'ரத்தக் காட்டேரிகள்' என்கிறோம். இது கடித்தால் அந்த ஆடு(மாடு) இறந்து விடக்கூடும்.



• வௌவால்

குட்டி போட்டுப் பாலூட்டும் பிராணிகளில் பறக்கக் கூடிய ஒரே உயிரினம். இதன் இறக்கை மற்ற பறவைகளுடையதைப் போன்றது இல்லை. கைகளையும், கால்களையும் இணைக்கும் தோல்தான் இறக்கையாகப் பயன்படுகிறது. வௌவாலுக்குப் பார்வைக் குறைவு. ஆனால் அதை சரிக்கட்ட வேறொரு டெக்னிக்கைப் பயன்படுத்துகிறது. வித்தியாசமான ஒலி அலைகளை வாயினால் எழுப்பும். அந்த அலை எந்தப் பொருளிலாவது மோதி விட்டுத் திரும்பும் நேரத்தைக் கணக்கிட்டு, அந்தப் பொருள் உள்ள தூரத்தை நிர்ணயித்து விடும். இதனால் இருளிலும் எந்தப் பொருளிலும் மோதாமல் இருக்கும்.

பொதுவாகப் பகலில் வௌவால் தலைகீழாக இருந்து கொண்டு என்ன செய்கிறது என்று கேட்டால், "அப்படித் தூங்குகிறது" என்பதுதான் பதில்.

— குல்லூ

6

# பாலகுமாரன்

"நீ மலையாளத்தான்... உங்க வழிமுறை, வாழ்க்கைவேற. நம்ம பக்கத்து வழிமுறை, வாழ்க்கை வேற. நீங்க மருமக்கதாயம்னு சொல்லிட்டு தாய் வழி சம்பிரதாயத்துல வர்றவங்க. நாங்க தேவகோட்டை செட்டியாரு. பிள்ளையார்பட்டிதான் கோயில். எங்களதுல்லாம் தந்தை வழி சம்பிரதாயம். பொம்பளைக்கு பெரிய பவர் ஒண்ணும் கிடையாது. ஊர் மெச்ச கல்யாணம் பண்ணிக் கொடுப்போம். நகை, நட்டு, பாத்திரம், பண்டம்னு நிறைய சீர்செனத்தி செய்வோம். எல்லாத்தியும் விட பொண்ணு குடுக்கற போது மாப்பிள்ளை பேருக்கு இத்தனை ரொக்கமோ, இந்த சொத்தோ தரேன்னு ஒப்பந்தம் பண்ணி, கல்யாணத்துக்கு முன்னாடியே சொத்து ரெஜிஸ்தர் பண்ணி, நிச்சயதார்த்தம் அன்னிக்கு பத்திரத்தைப் பிள்ளை வீட்டார் கைல குடுத்துருவோம். அதான் பொண்ணுக்கு நாங்க பண்ற மிகப் பெரிய மரியாதை.

"பாத்திர பண்டமும் நகை நட்டும் முக்கியம்தான். ஆனா அந்த செட்டியார் வீட்ல இல்லாததயா குடுத்துரப்போறம்..."

"அவங்க வீட்டுல ரெண்டு பொண்ணு இருந்துச்சு... இருநூறு பவுன் வெளிய போச்சு. ரெண்டு மருமக வந்தா.. இருநூறு பவுன் உள்ள வந்துச்சு... அவ்வளவுதான் கணக்கு. ஆனா மருமகளுக்கு சீரா மாப்பிள்ளை பேர்ல பத்துவேலி தஞ்சை அல்லது பட்டணத்துல ஒரு மூணு கிரவுண்டு நிலத்தோட ஒரு பங்களா அல்லது மலையடிவாரத்துல இருபத்தஞ்சு ஏக்கர் புஞ்சை... இதெல்லாம் இருந்துச்சுன்னா அந்தப் பொண்ணுக்கு பெரிய பாதுகாப்பு.

"நீ பொண்டாட்டி இல்ல, வெளிய போடின்னு எந்த புருஷனும் சொல்ல முடியாது. சொன்னா எழுதிக் கொடுத்த சொத்த திருப்பிக் கொடுக்கணும். நல்ல விளை நிலத்தை, பங்களாவை வாங்கின பிறகு திருப்பித்தர எவனுக்காவது மனசாவுமா? அப்படி நல்ல சொத்தோட வந்த பொண்ணை அசிங்கப்படுத்த முடியுமா? செட்டியாருங்க ஒண்ணும் பணத்தாசை பிடிச்சவங்க இல்லை. அவுங்க பெத்த பொண்ணுங்க நல்லா இருக்கணும்னுதான் காசு காசுன்னு ஓடுறாங்க.

"எந்த ஒரு வம்சம்... எந்த ஒரு ஜாதி தன் இனத்துப் பெண்களுக்கு மானம், மரியாதை கெட்டுரப் படாதுன்னு நினைக்குதோ... தன் இனத்துப் பெண்கள் கம்பீரமாவும், சௌக்கியமாவும் இருக்கணும்னு நினைக்குதோ அந்த இனம் நல்லா வளரும். செட்டியார்கள் நல்லா இருக்கறதுக்குக் காரணம் ஆச்சிகள்.

"தன் புருஷன் வியாபாரி... வணிகன்... வெய்யிலோ, மழையோ, காடோ, மேடோ... நாலு இடம் அலைஞ்சு திரிஞ்சுதான் காசு சம்பாதிக்கணும். சோறு கிடைச்ச இடத்துல தின்னு, நிழல் கிடைச்ச இடத்துல தூங்கி, அலுப்பு சலிப்பு பாக்காம காசு சம்பாரிச்சு வரான்னு தெரிஞ்சு ஒரு கருணையோட புருஷனைப் பாக்கறவ.

"வியாபாரம் பண்ற இடத்துல புருஷனா கப்பட்டவன் நயந்தும் பயந்தும் நடந்துப்பான்னு தெரிஞ்சவ. வியாபாரிக்கு அரசனாலயும், திருடனாலயும் சங்கடமில்லாத நாளே கிடையாது. அடிச்சுப் போட்ட மாதிரி ஒரு நல்ல வணிகன் தூங்கவே முடியாது. இதுவும் ஆச்சிக்குத் தெரியும்.

"சரீர அலைச்சலும், மனக்கிலேசமும் ஒரு வணிகனுக்கு உண்டான தீர்ப்பந்தம்னு ஒரு ஆச்சி புரிந்துகொண்டு, தன் புருஷனாக இருக்கும் வணிகனுடைய சுகத்துக்கு எதுவேணா செய்வா. தன்னோட குலம் நல்லா விளங்கணும்னு ஆச்சி கடுமையான கற்போட இருப்பா... அதே நேரம் நாலு இடம் போற புருஷன் முன்ன பின்ன இருந்தா கேட்டும் கேட்காத மாதிரி போயிடுவா. ஒண்ணுக்கு ரெண்டா விலை வச்சு





விக்கிறமே... நல்லவன் கெட்டவன் எல்லார் காசும் நம்ம கைக்கு வருதே... 'ஐயோ செட்டியார் சம்பாதிச்சுட்டானே' அப்படீன்னு பல கண்ணு பட்டிருக்குமே... என்ன செய்யறதுன்னு வணிகர்களுக்கு ஒரு பயம் உண்டு. தருமம் பண்ணி தன்னைக் காப்பாத்திக்கறதுக்கு அவங்க தயங்கறதே இல்லை.

"எந்த ஆதாரமும் இல்லாத பூமி அந்தரத்துல சுத்துதே... எப்படி? ஒரு தர்மத்துனால. ஒரு தர்மம் காப்பாத்தறதுனால... இல்லையா? அதே போல எந்த ஆதாரமும் இல்லாத மனுஷ வாழ்க்கையை, சொடுக்கு நேரத்துல காணாம போயிடற மனுஷ வாழ்க்கையை எது காப்பாத்தும்... தர்மம் தான் காப்பாத்தும். வீட்டுப் பொம்பளை சரின்னு சொல்லாம தர்மம் நடந்துடுமா? இன்னிக்கு செட்டியாருங்க அள்ளி அள்ளிக் கொடுக்கறதுக்குக் காரணம் என்ன தெரியுமா... அவங்க வீட்ல இருக்கற ஆச்சிதான்!

"வாரி வாரி வழங்கற கையா இருந்தாலும் வணிகக் குலம் ஒத்தக்காசு ஏமாந்துறாது. அநியாயமா சம்பாதிக்கறதுக்கு வெக்கப்படற கூட்டம் எங்களுது. அநியாயமா செலவழிக்கறதுக்கும் அஞ்சும். அப்படி யாரும் செலவழிச்சா கண்டிக்கும்."

பூட்டிக் கிடந்த எதிர் எஸ்டேட்டின் வாசலில் கட்டில் போட்டு லட்சுமண செட்டியார் மல்லாந்து படுத்தபடி பேசிக் கொண்டிருக்க, நாராயணன் வாசல்படியில் உட்கார்ந்தவாறு அவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தான். அவரோடு வந்த மூவரும் ஆளுக்கு ஒரு நாற்காலியை வாசலில்

போட்டு அரைத் தூக்கத்தில் சரிந்தபடி இருந்தார்கள்.

“நாச்சியப்பன் ஷோக்காளி... அவன் பொண்டாட்டிக்கு அத்தினி போறாது. ஆரம்பத்துலயே கண்டிச்சு வச்சிருக்கணும். ஆச்சிக்கு நல்லது கெட்டது சொல்லித்தர ஆளில்லாம போச்சு. எங்கியோ மலைமேல கொண்டாந்து குடித்தனம் வச்சுட்டானா... வந்து பாத்து சத்தம் போட வகையில்லாம போச்சு. சரி போட்டும். இந்த இடத்துல வந்து தோட்டம் போட்டுப் பயிர் பண்றது பெரிய வேலைதான். ஆறுமாசம் அசறாம உழைக்கணும்னு எங்களுக்குப் புரியுது. பசி தாங்கலை. குளிர் தாங்கலை... பொம்பளை வேணுமில்ல... இதுவும் புரியுது. வண்ணமா திங்கலைன்னா இந்த மலை ஏறி இறங்க முடியுமா? ஏதோ நாகர்கோவில்லேர்ந்து ஒரு பாதி மலையாளக்காரியக் கொண்டாந்துட்டான்?

“சாப்பாட்டுக்கு இல்லாத குடும்பமா இருந்துருக்கும். நகை போட்டு, புடைவை போட்டு, பாத்திரம் பண்டம் காமிச்சுத் தூக்கியாந்துட்டான். மண்ணு சட்டில சமைச்ச குடும்பம் பித்தளைத்தவலைய பாத்ததும் ஆடிப் போயிருக்கும். காதுல பனை ஓலைய சுத்தித் திரியற பொம்பளைங்களுக்கு அரக்கு பாம்படம் போட்டுருப்பான். என்னையும் எடுத்துக்க.. எம் பொண்ணையும் எடுத்துக்கன்னு அழைப்பு வந்திருக்கும். தம்பிய பெரிய படிப்பு படிக்க வைக்கறேன்னு வாக்குக் குடுத்து, காசு குடுத்து இத்தினி வருஷம் சௌகரியமா இருந்துட்டாங்க. தம்பி மேல் படிப்பு முடிச்சுட்டான். அந்தப் பொண்ணு கிட்ட நாப்பது சவரன் நகை இருக்கும் போல இருக்கு. குடித்தனம் பண்ண பாங்குல ரொக்கம் போட்டிருக்க மாட்டானா... அதையும் அவளே வச்சுக்கட்டும். பாவப் பட்ட பொம்பளை... தாலிகட்டாத் குடித்தனம்... கூட எதுகேட்டாலும் குடுத்துர்றோம். இந்த ஏலக்கா எஸ்டேட் என்னுதுன்னு அந்த பகவதி ஆரம்பிச்சா நல்லா இருக்காது.

“இது ஒரு செட்டியார் சொத்து. இன்னொரு செட்டியார் கிட்டதான் போகணும். கூத்தியாளுக்குப் போகப் படாது. போகவிட மாட்டோம். சாம, தான, பேத, தண்டம் அத்தினியும் பிரயோகம் பண்ணுவோம். உனக்காச்சு எனக்காச்சுன்னு மல்லு கட்டி நின்னுருவோம்.

“நீயாரு... இத கேக்கறதுக்குன்னு உனக்குள்ள ஒரு கேள்வி வரும். ஆச்சியோட தாத்தா எனக்கும் தாத்தா. ஆச்சியோட அப்பா எனக்குப் பெரியப்பா.

“இந்த நிலம் வாங்கினது ஒரு பெரிய கதை. ஆச்சியோட தாத்தா. அதாவது எங்க தாத்தா இருபது வயசுல, நாள் நட்சத்திரம் பாத்து வியாபாரத்துல இறங்கினாக. இருபதடிக்கு இருபதடி கடை போட்டு ரெண்டடிக்கு ரெண்டடில தேக்கு மரம் கல்லாப் பெட்டி செய்து, தனி பேரேட்டு புக்கு, இரும்புப் பொட்டி எல்லாம் செய்து உக்கார வச்சாங்க. மூணு நாள் சும்மா உக்காந்திருந்த செட்டியாரு, அதாவது எங்க தாத்தா எதாவது வியாபாரம் பண்ணியே ஆகணும்கற துடிப்புல, நாலாவது நாள் ஒரு ஆளுக்கு அஞ்சாயிரம் ரூபா கடன் குடுத்தாக. அப்ப வியாபாரம்கறது வட்டி வியாபாரம் தான்.

“அந்த அஞ்சாயிரம் ரூபா கடன் குடுக்கறதுக்கு முன்னாடி அவுக அப்பாவ ஒரு வார்த்தை கேட்டுருக்கணும். கேக்கலை. தானா முடிவு பண்ணிட்டாக. அவுக அப்பாருக்குத் தெரிஞ்சதும் தாம் தூம்னு குதிச்சாரு.. எத்த நம்பி அவனுக்குக் கடன் குடுத்த. அவனால திருப்பித் தரமுடியாது. போய் கடன் குடுத்த பணத்தைத் திரும்பி வாங்கிட்டு வான்னு சத்தம் போட்டாக. அது முத வியாபாரம். காத்தால பத்துமணிக்குக் கடன் குடுத்துட்டு ஒரு மணிக்குத் திருப்பிக் குடுன்னு கேட்டா நல்லா இருக்காதே... அதனால கடன் குடுத்தவன் கிட்ட போய், எங்க அப்பா ஏன் கடன் குடுத்தேன்னு வையறாரு. உன்னைத் தேடிப் புடிச்சு காசைத் திருப்பி வாங்கிட்டுவான்னு கத்தறாரு. அப்படி செய்ய எனக்கு மனசு இடம் கொடுக்கலை. நான் தேடிப் பாத்தேன். அவரு இல்லைன்னு அப்பாட்ட சொல்லப் போறேன். அதுக்கு ஏத்தவிதமா நீ ஊரை

---

## “இந்த வருஷம் பரீட்சையில Question paper எப்படி இருந்தது ப்ரதர்?”

இதோ பதில்:-

மெடிக்கல் ஸ்டூடண்ட் : “டெட் ஈஸி யார்...!”

அக்ரிகல்சரல் ஸ்டூடண்ட் : “தண்ணி காட்டிருச்சப்பா...!”

லா ஸ்டூடண்ட் : “ஒரே கான்டிரவர்ஷியல்!”

உயிரியல் ஸ்டூடண்ட் : “அறுவை, ஒரே அறுவை மயம்!”

ஆர்ட் ஸ்டூடண்ட் : “குழப்பிடுச்சுங்க!”

ஸ்கூல் கேர்ள் : “பின்னிட்டேன்”

பஞ்சாயத்து ஸ்கூல் பையன் : “எங்கப்பாவைப் போய் ‘சார்வாள்களை’ பார்க்கச் சொல்லணும்!”

-கே.ஜி.எஸ். கோவிந்தன்

விட்டு கொஞ்சநாள் ஒதுங்கியிருக்கணும். அப்படி போறதுக்கு கைச் செலவு காசா நான் எதாவது குடுக்கணும்னாலும் குடுத்துர்றேன். இந்த அஞ்சாயிரத்த நல்லபடியா வெளியூருக்கு எடுத்துட்டுப் போய் வியாபாரம் பண்ணி, வட்டியும் முதலுமா எனக்கு திருப்பிக் குடுத்தரணும்னு கேட்டுக்கறேன். நான் உங்களுக்கு நல்ல மனசோட குடுத்த காசு. இந்த காசுக்கு எந்த கெடுதியும் வரா துன்னு கை கூப்பிச் சொன்னாராம்.

"இருபது வயசு செட்டிப் பிள்ளை தன் வாக்கைக் காப்பாத்தணுங்கறதுக்காக, தன் முதல் வியாபாரத்தை நல்ல விதமா நடத்தணும்கறதுக்காக என்ன அழகா பேசிருக்கு பாருய்யா. இதை இப்ப நினைச்சாலும் எனக்கு அழுகை வருது.

"ஆனா விதி வலிது. அஞ்சாயிரம் ரூபா கடன் வாங்கி வெளியூருக்கு வியாபாரத்துக்குப் போனவன் போனவன்தான். ஆளே காணம். எங்க தாத்தாவ அவுக அப்பா தன்கிட்ட கேக்காம கடன் குடுத்ததுக்காக தினம் திட்டிக்கிட்டேயிருப்பாராம். சோறு திங்க உக்கார்ற போதெல்லாம் ஏசுவாராம். எங்க தாத்தாவுக்கும் இந்த விஷயம் முள்ளா உறுத்திட்டிருந்திருக்கு. எந்த கோயிலுக்குப் போனாலும் அந்த அஞ்சாயிரம் உருப்படியா திருப்பி வரணும்னு வேண்டிக்குவாராம். அதுக்கு அடுத்து நடந்த வியாபாரம் எல்லாம் ஓஹோன்னு நடந்தாலும் இந்த அஞ்சாயிரம் போனது ரொம்ப வருத்தம்.

"ஆனா விதி திசை மாறுச்சு. பதினோரு வருஷம் கழிச்சு அந்தாள் வந்தான். ரெண்டாவது உலகப் போர் நடந்தபோது இங்கிலாந்துக்கு காப்பிக் கொட்டை, ஏலக்கா, தேயிலைத்தூள் கேரளாவுலேர்ந்து வாங்கி, மெட்ராஸ் கொண்டு போய்க்குடுத்து, மெட்ராஸ்ல பெரிய தொகை கடன் வாங்கி, மொத்த சரக்கும் கப்பல்ல ஏத்தி, அந்தக் கப்பலும் ஜப்பான்காரன்கிட்ட பிடிபட அத மடக்கி அமெரிக்காக்காரன் மீட்டுவர காப்பிக் கொட்டையும், தேயிலையும் ஏலக்காயும் ஏரோப்ளேன்ல அமெரிக்கா போயிடுச்சு. வாங்கினவரு கிறிஸ்தவரு. வாத்தியாரா இருந்து சலிச்சுப்போய் வியாபாரியானவரு. அமெரிக்கால ஒரு கம்பெனி தொடர்ந்து காப்பிக் கொட்டையும், ஏலக்காயும் சிலோன் லேர்ந்து டீயும் கொண்டாரச் சொல்லிச்சு. ஆளு ரெக்கை கட்டிப் பறந்திருக்கான். அஞ்சாயிரம் கடனை சுத்தமா மறந்துட்டான். பெரிய தொகையோட யுத்தம் முடிஞ்சு மதுரைக்கு வந்து, போடிநாயக்கனூர்ல நிலம் வாங்கி, போடிமெட்டுல ஏலக்காதோட்டம் வாங்கி, சம்பிரமா செட்டிலா யிட்டான். அமெரிக்கால ஏது பண்ணானோ என்ன பண்ணானோ முதல்ல தேமல் மாதிரி இருந்து அப்புறம் தோல் சுருங்கி குஷ்டம் மாதிரி வந்துருச்சு. கொண்டாடின உறவெல்லாம் தூரப் போயிடுச்சு. கிட்ட போக முடியாத அளவுக்கு உடம்பு மோசமாயிடுச்சு. தேவகோட்டைக்கு ஆளனுப்பிச்சான். எங்க தாத்தா விழுந்தடிச்சுக்கிட்டு ஓடினாரு. 'என் கைல காசு இல்ல. இருக்கற கொஞ்சம் காசும் எனக்கு வைத்தியத்துக்கு வேணும். உன் அஞ்சாயிரத்த நான் திருப்பித் தராதது பெரிய குத்தம். ஒரு கடுதாசி கூட போடாதது பாபம். கேரளாவுல இருபது ஏக்கர் நிலமும், இருபது ஏக்கர் ஏலத் தோட்டமும் நீயே வச்சுக்க'ன்னு எழுதிக் கையெழுத்துப் போட்டுக் குடுத்தானாம். அந்தப் பத்திரத்தை வாங்கி தன்னோட வயசான அப்பா கைல வச்சு எங்க தாத்தா விம்மி விம்மி அழுதாராம். செட்டிப் புள்ளை நம்பிக் குடுத்த காசு திரும்பாம போவாதுய்யா. எப்படியும் செட்டிப்புள்ளை கைக்கு வந்தேயாவணும். எங்க தாத்தாவோட அப்பா எங்க தாத்தா தலையைத் தடவி இந்த நிலத்து மதிப்பு என்னன்னு தெரியாது. ஆனாலும் நீ முத முதலா சம்பாதிச்ச சொத்து. பதினோரு வருஷம் கழிச்சு உனக்கு வந்த லாபம். என்ன காரணம் கொண்டும் இத நீ விக்காத. இத என் கட்டளையா உன் புள்ளைகளுக்கு சொல்லி வை. அப்படீன்னு சொன்னாராம். இப்பேர்ப்பட்ட சொத்து இது. வுட்ருவமா? நாகர்கோவில் பகவதிக்குக் குடுத்துருவமா..."

நாராயணன் தடுக்கென்று எழுந்தான். லட்சுமணச் செட்டியார் பயந்து போய் என்ன என்று கத்தினார்.

"முள்ளம்பன்றி" என்று சொல்லிவிட்டு நாராயணன் இருட்டில் ஏலப் புதர்களை நோக்கி ஓடினான்.

(தொடரும்)

**எழுத்தாளர்களே நினைவூட்டுகிறோம்!**

இந்த ஆண்டின் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்கான கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி ஜூன்-15. மேலும் விவரங்களைச் சென்றவார கல்கி இதழில் பாருங்கள். இல்லையேல் அடுத்த வார இதழைப் பாருங்கள்.

—ஆசிரியர்.

*மர்மக்கதை, திகில் கதை என்றெழுதுகிற எழுத்தாளர்களுக்கிடையே ராம்சே காம்பெல் (Ramsey Campbell) வயதில் இளையவர். ஆனால் புகழ் பெற்ற பல திகில் கதைகளை எழுதிய அனுபவம் இவருக்கு உண்டு. சாதாரண சம்பவங்களைக் கூட மிகக் குறைந்த பாத்திரங்கள் மூலம் திகில் கதையாக மாற்ற வல்லவர் என்கிற புகழ் இவருக்கு இருந்தது. அவரது கதைகளில் குறிப்பிடத்தக்க கதை, 'முதலில் அழைத்து விடு!'*

# முதலில் அழைத்து

## ராம்சே காம்பெல்

கிழவரின் வீட்டிலிருந்து டெலிபோன் அழைப்புக்கு பதிலளிப்பது யார் என்பதைத் தெரிந்து கொள்ள, நூல் நிலைய குமாஸ்தா நெட் பெரிதும் விரும்பினான். அவனை இது விஷயமாகத் தூண்டி விட்டவர்கள் அங்கு பணியிலிருந்த மற்ற வேலைக்காரர்கள்.

பல மாதங்களுக்கு முன்பே இதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற ஆர்வம் அவனுக்கே ஏற்பட்டிருந்தது.

ஒருநாள் அவன் தனது மேஜையருகில் உட்கார்ந்து உள்ளே செல்லுகிற வாசகர் எவராவது கையில் பை வைத்திருக்கிறார்களா, அப்படி வைத்திருந்தால், சப்தம் போட்டு அவர்களைக் கூப்பிட்டு எந்தவிதமான பைகளையும் நூலகத்திற்குள் கொண்டு செல்லக் கூடாது என்று கூறுவதற்காகப் பார்த்துக் கொண்டிருந்த போது, அவனுக்கு மேலே உள்ள நூலக அதிகாரி ஒரு முதியவரை அழைத்து வந்து, "நெட், இந்தப் பெரியவர் உனது டெலிபோனை உபயோகித்துக் கொள்ளட்டும்" என்றார். ஒவ்வொரு நாளும் அவர் இந்த டெலிபோனை உபயோகிக்கலாம் என்று அவர் கூறவில்லையானாலும் 'இன்று மட்டும்' என்று அவர் கூறவில்லையே, ஆகையால் அந்த முதியவர் தினசரி டெலிபோனை உபயோகிக்க வந்த போது அவன் எதுவும் மறுப்பு தெரிவிக்கவில்லை. அதற்கு மற்றொரு காரணமும் இருந்தது. பெரியவர் அடிக்கடி நூலகரிடம் பேசுகிறவர். நூலகரே அறிந்திராத பல புத்தகங்களைப் பற்றி அவர் கூறுவதுண்டு. பெரியவர் விஷயம் தெரிந்த ஆசாமி.

பெரியவரது டெலிபோன் பேச்சு சுவாரசியமானதல்ல. அப்படி ஏதாவது பேச்சு இருந்தால் நெட் அதை ரசித்திருப்பான். ஆனால் இது மிக விசித்திரமான டெலிபோன் பேச்சு. பெரியவர் வருவார், ரிசீவரை எடுத்து எண்களை டயல் செய்வார். சிறிது நேரம் காதில் வைத்து கவனிப்பார். பிறகு ஒருவிதமான உணர்ச்சியும் அற்ற குரலில் ஒரே ஒரு வாக்கியம் பேசுவார் : "நான் இப்போது வீட்டிற்கு வருகிறேன்" என்று; அவ்வளவுதான். ஒவ்வொரு நாளும் அதே நேரத்திற்கு அவர் தவறாமல் இந்த ஒரு வாக்கியத்தை மட்டும் கூறி விட்டு வீட்டிற்குப் போவது அவனுக்கு விசித்திரமாகப் பட்டது.

பெரியவர் ஒருநாள் கூட நேரம் தவறி வந்ததில்லை. தினமும் தவறாமல் நூலகத்திற்கு வந்து புத்தகங்களைப் படிக்கும் அவர், மிகச் சரியாக பன்னிரண்டு மணிக்கு வீட்டிற்கு டெலிபோன் செய்து விடுவார். அவர் டெலிபோனில் பேசுவது அவரது மனைவியுடன் என்பது நெட்டின் யூகம். 'இந்த நேரத்திற்குத் தவறாமல் வீட்டிற்கு வருவார் என்பது அவர் மனைவிக்குப் பழக்கமாகியிருக்க வேண்டுமே, பின் எதற்காக இந்த டெலிபோன் பேச்சு!' என்று ஆச்சரியப்பட்டான் நெட். இதைக் கண்டுபிடிக்க வேண்டும், யாரிடம் பேசுகிறார் இந்தக் கிழவர்?

ஒருநாள் பெரியவர் டெலிபோன் செய்ய வரும் நேரத்திற்கு அவன் அங்கே இன்னொரு ஆசாமியை உட்கார வைத்து விட்டு, டெலிபோன் ஆபரேட்டரிடம் சென்று உட்கார்ந்து விஷயத்தைக் கூறினான். அவர்கள் இருவருமே பெரியவரது ஒற்றை

வரிப் பேச்சைக் கேட்டார்கள்; பெரியவர் டயல் செய்ததுடன் அந்த வீட்டிலிருக்கும் போன் கிரீச்சிடுகிற ஓசை. பிறகு ரிசீவரை எடுக்கும் ஒலி. அதன் பிறகு பெரியவரின் ஒற்றை வரிப் பேச்சு. அவ்வளவுதான். உடனே அங்கேயும் ரிசீவர் வைக்கப்படும் சப்தம். வேறு ஒன்றும் இல்லை. ஒரு மூச்சு விடுகிற ஒலி கூட இல்லை. ஹலோ என்றோ, யார் என்றோ ஒருவரும் கேட்கவில்லை. என்ன விசித்திரம் இது?

பெரியவரின் வீட்டு

# விரு!



டெலிபோன் நம்பர் நெட்டுக்கு நன்றாக மனப்பாடம் ஆகியிருந்தது. ஒருநாள் அவர் வருவதற்கு ஒரு அரை மணி நேரத்திற்கு முன்னால் அந்த நம்பரை டயல் செய்தான். சரியாக ஏழு முறை கிரிங், கிரிங் என்று சப்தம் எழுப்பிய பிறகு யாரோ ரிசீவரை எடுக்கும் சப்தம் கேட்டது. நெட்டின் இரத்த ஓட்டம் அதிகரித்தது. 'ஹலோ' என்றான். பதிலில்லை. மறுபடியும் 'ஹலோ' என்றான். ஊஹூம்... பதிலில்லை. இதே நிலை பல நிமிஷங்கள் நீடித்த பிறகு நெட் சலித்துப் போய் ரிசீவரை அதன் இடத்தில் வைத்தான். யாரோ ரிசீவரை எடுக்கிறார்கள், அது தெரிகிறது. ஆனால் ஏன் ஒரு ஹலோ கூடச் சொல்லவில்லை? பலமுறை நாம் ஹலோ, ஹலோ என்று கூப்பிட்டும் ஏன் பதிலே



**"மைக் டெஸ்ட் பண்ணுபவர் 'ஒன்-டூ திரி'ன்னு தானே சொல்வார். இவர் என்ன 'பைவ், பைவ், பைவ்'னு மட்டும் சொல்றார்...?"**

**"அவர் லக்கி நம்பர் 'பைவ்'வாம்!"**

கூறாமல் இருக்கிறார்கள்?

பெரியவரின் மோதிர விரலில் ஒரு மோதிரம் இருக்கிறது. ஆனால் அதில் கல் இருக்க வேண்டிய இடத்தில் மங்கிய மஞ்சள் நிறத்தில், உடைந்த விரல் நகம் போன்ற ஏதோ ஒன்று உறுதியாகப் பொருத்தப் பட்டிருக்கிறது. இதெல்லாம் என்ன? மர்மமான கிழவர், மர்மம் நிறைந்த வீட்டிற்கு டெலிபோன்! இது என்ன என்று கண்டுபிடிக்க வேண்டும் என்கிற உறுதி நெட்டுக்கு ஏற்பட்டது.

மதியம் உணவு வேளையில் கான்டீனில் கூடும் மற்ற பணியாளர்களிடம் நெட் பேச்சுக் கொடுத்தான். அவர் மர்மம் நிறைந்த ஆசாமி என்றான். "நூலகத்தில் கூட அவர் ஆவியுலகம் சம்பந்தப்பட்ட புத்தகங்களைத் தான் படிக்கிறார். கதைகளை அல்ல. உண்மையான ஆவி உலக நிகழ்வுகள் சம்பந்தப்பட்ட புத்தகங்களை" என்றான். யாரும் அவன் பேச்சை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளவில்லை, 'எல்லாம் தெரியும், நீ உன் வேலையைப் பார்' என்பது போலப் பேசினார்கள்.

நெட்டுக்குக் கோபம். 'இருக்கட்டும், நான் இந்த மர்மத்தைக் கண்டுபிடிக்க அவர் வீட்டிற்கே போகிறேன். போனதற்கு அடையாளமாக அங்கிருந்து ஏதாவது கொண்டு வந்து இவர்களுக்குக் காட்டுகிறேன்' என்றெண்ணிக் கொண்டான்.

கிழவருடைய நூலக அனுமதி அட்டையிலிருந்த முகவரிக்கு அவன் மறுநாளே சென்றான். அது, கிழவர் நூலகத்தில் இருக்கும் நேரம். ஒரு தெருவின் கடைக் கோடியில் இருந்த பராமரிக்கப்படாத, ஆனால் மிகப் பெரிய வீடு அது. அந்த வீடே புதிதாக வருபவர்களைப் பயமுறுத்துவது போலக் காட்சியளித்தது. அவன் முதலில் முன் வாசல் கதவைத் தட்டலாம் என்று நினைத்தான். ஆனால் அப்படிச் செய்யாமல் திறந்திருந்த சில ஜன்னல்கள் வழியே உள்ளே பார்த்தான். எல்லா இடத்திலும் தரையில் தூசியும் குப்பைகளும் காணப்பட்டன. உபயோகத்திலிருக்கிற வீட்டைப் போலத் தெரியவில்லை. ஓரமாகவே சென்று பின்பக்க ஜன்னல் வழியே பார்த்தான். சமையலறை தெரிந்தது. பழைய ஷெல்ப் ஒன்றில் டின்களில் அடைத்து வரும் சில உணவு டப்பாக்கள் இருந்தன. ஒரு பழைய ஸ்டவ், கழுவுகிற இடத்தில் இரண்டு மூன்று பிளேட்டுகள் கண்களில் தெரிந்தன. அவன் மறுபடியும் முன் பக்கக் கதவருகில் வந்தான். வீட்டில் கிழவரது துணை இல்லை போலத் தெரிந்தது. அவன் கதவைத் தட்டுவதற்காகத் தொட்ட போது, அது திறந்து கொண்டது. அவன் உள்ளே சென்று மறுபடியும் கதவை மூடினான். யாராவது வந்து திறந்தால் தெரியட்டும் என்பதற்காக.

சமையலறை வரையில் நீண்டிருந்த ஹால் மங்கலாகத் தெரிந்தது. வலது புறத்தில் முன் அறை. அவனது இடதுபுறமாக மாடிப் படிகள். அதைக் கடந்து அவன் வெளியிலிருந்து பார்த்த இரண்டு பெரிய காலி அறைகள். அவன் மெதுவாக சப்தமின்றி மாடிக்குச் சென்றான். அவனது கனத்தைத் தாளாமல் அந்த மரப்படிகள் சற்று ஆடி கிறீச்சிட்டன. தூசியும் சிலந்திப் படைகளும் நிறைய இருந்தன. அவனுக்கு மூச்சுத் திணறியது. மாடியில் இருந்த இரண்டு அறைகளும் காலி. அங்கிருந்து மேலே செல்லும் படிகளின் முடிவிலிருந்த கதவு மூடப்பட்டிருந்தது. அதற்கு இடப்புறமாக இருந்த அறையைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான்.

அந்த அறை சற்று சுத்தமாக இருந்தது. ஓரத்தில் ஒருவர் படுக்கும் கட்டில், மெத்தை, அதிலிருந்த போர்வைகள் வெகு காலம் உபயோகத்தில் இருப்பவை போல மங்கித் தெரிந்தன. இரண்டு மேசை, நாற்காலிகள், சில புத்தகங்கள், ஒரு ஸ்டாண்டில் பெரிய கருநிற மெழுகுவர்த்தி. ஒரு மேசையின் மீது ஒரே ஒரு புத்தகம் இருந்தது. நெட் அந்தப் புத்தகத்தைப் பிரித்தான். அது சர்ச்சுகளில் காணப்படும் எழுத்துக்கள் போலிருந்ததால் அது இலத்தீன் மொழிப் புத்தகம் என்று தெரிந்து கொண்டான். பக்கங்களுக்கு இடையே ஒரு தனி அச்சிட்ட காகிதம் இருந்தது. நெட் அதனை எடுத்துப் பார்த்தான். அது பைபிளிலிருந்து கிழிக்கப்பட்ட தாள். லாசரஸ் பற்றிய விஷயம் ஆரம்பிக்கும் பகுதி.

அதன் அடியில் ப. 491. என்று எழுதப்பட்டிருந்தது. உடனே அவன் அந்தப் பக்கத்தைப் பிரித்தான். அந்தப் பக்கத்தில் ஒரு படம் இருந்தது. அது ஒரு சடலம் தனது சவப் பெட்டியில் எழுந்து உட்கார்ந்திருப்பது போன்ற படம். இங்கு வந்து போனதற்கு அடையாளமாக ஏதாவது வேண்டுமே என்பதற்காக பைபிளிலிருந்து கிழிக்கப்பட்ட அந்தத் தாளை மடித்து அவன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான்.

பிறகு அவன் வேகமாகப் படிகளில் இறங்கி ஹாலுக்கு வந்தான். அந்த ஹாலின் சுவரில் ஒட்டப்பட்டிருந்த வால் பேப்பர்கள் இரண்டு புறமும் தோள்பட்டை உயரத்திலிருந்து கிழிபட்டுத் தொங்கின. அவன் சமையலறைக்குச் சென்றான். மேலே மாடியிலிருந்து இறங்கும் போது ஏதோ வித்தியாசம் தெரிந்தது. அது என்ன என்று சிந்தித்த போது, முதலில் மூடப்பட்டிருந்த மொட்டை மாடிக் கதவு இப்போது திறந்திருந்தது என்று பளிச்சென்று நினைவுக்கு வந்தது. அப்படியானால் யாரோ இருக்கிறார்கள். யார் அது? அவன் தன்னையறியாமல் திரும்பிப் பார்த்த போது ஒரு பெண் இவனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு ஹாலில் நடந்து சென்று கொண்டிருந்தாள். அவள் திரும்பிப் பார்க்கக்கூடும் என்கிற அச்சத்தினால் அவன் உடனே சமையலறையில் நுழைந்து கதவோரமாக நின்றான். அவன் அங்கிருந்தவாறு பின் வாயில் கதவைக் கவனித்தான். அது குறுக்கே மரச்சட்டங்களை வைத்து நிலைப் படியுடன் ஆணி அறையப்பட்டிருந்தது. முதல் முதலாக அவனுக்குப் பயம் தோன்றியது. பின்புறமாகப் போக வழி இல்லை! சரி. அதனால் என்ன? அவள் ஒரு பெண். அப்படியே அவன் அங்கிருப்பதைக் கண்டுபிடித்தாலும் அவளால் என்ன செய்ய முடியும்? பார்த்துக் கொள்ளலாம் என்று அவன் சமாதானம் செய்து கொண்டான். மெதுவாக சமையலறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். ஹாலில் எவருமில்லை.

அங்கிருந்து வெளியேறி விட வேண்டும் என்கிற நோக்கத்தோடு அவன் ஹாலில் நடந்து வந்த போது அந்தப் பெண் மாடிப் படிகளுக்கும் முன் வாயில் கதவுகளுக்குமிடையே காணப்பட்டாள். அவன் உடனே வலது புறத்திலிருந்த அறைக்குள் நுழைந்து மறைவாக நின்றான். சிறு நடுக்கம் ஏற்பட்டது. இதயம் வேகமாகத் துடித்துக் கொள்ளுவதை உணர்ந்தான். அவள் அந்த அறையைக் கடந்து செல்லும் போது அவளது கை மட்டும் தெரிந்தது. ஒல்லியான கை விரல்களில் மங்கிய மஞ்சள் நிறத்தில் நகங்கள் நீண்டிருந்தன. அவளது மோதிர







# பராமரிப்பின்றி வாடுகிற கூந்தலுக்கு அழகுண்டோ ?

உங்கள் கூந்தல் பராமரிப்பின்றி வாடுகிறதா என்பதைக் கண்டறிய இதோ ஒரு சுலபமான வழி. குளித்த பிறகு தலை வாரும்போது சிக்குகள் இருக்கிறதா என்று பாருங்கள். சிக்குகள் இருந்தால் கூந்தல் வலுவற்றும், பராமரிப்பின்றி வாடுவதாகவும் அர்த்தம்.

இந்நிலை கூந்தலை சோப்பாலும், சாதாரண ஷாம்பூக்களாலும், மற்ற சாதாரண பொருட்களாலும் கழுவுவதால் கூந்தலின் இயற்கை நலன்களும், ஈரப்பதமும் வற்றிப்போய் ஏற்படுகிறது. மேலும் கூந்தலை சாதாரண பொருட்களால் கழுவும்போது அழுத்தித் தேய்ப்பதால் அது சேதமடையவும் கூடும்.

எனவே சிக்குகளை சீப்பால் சீவி எடுக்க முயற்சிக்காதீர்கள். வலுவற்ற முடிகள் அதனால் உடைந்து போகக்கூடும். அதற்குப்பதில் கூந்தலுக்கு அளியுங்கள் :



கோலின்
ஃபிலிம் ஹேர் ஸ்டைலிஸ்ட்

## புதிய ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனர்
## கூந்தலுக்கு விசேஷ ஊட்டு

புதிய ஸன்ஸில்க் ஆஃப்டர் வாஷ் கண்டிஷனர், குளித்த பிறகு கூந்தலுக்கு பராமரிப்பு தேவைப் படும்போது செயல்புரியும். சிக்குகளை இதமாய் அகற்றி, கூந்தல் சேதமடையாமல் பாதுகாத்து மென்மையாகவும், அழகாகவும் ஆக்கும்.



குளித்த பிறகு கூந்தலிலுள்ள அதிகப்படி நீரை பிழியவும். தேவையான அளவு ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனர் எடுத்து கூந்தல் முழுவதும் தடவவும். நுரைவராது



இரண்டு நிமிடம் நியூட்ராசோ் நலன்களை கூந்தல் எடுக்க விடுங்கள்.



பிறகு அலசுங்கள். நன்கு பராமரிப்பு பெற்ற கூந்தல் தொட்டால் வழுவழுப்பாக இருக்கும். டவலால் தலையை துவட்டி லேசான ஈரத்தில் சீவவும். இப்போது முடி உடைந்துவிடும் என்கிற கவலை வேண்டாம். கூந்தல் சிக்குகளற்றும், வலுவாகவும், நல்ல பராமரிப்பு பெற்றும் இருக்கும்.



பிறகு வழக்கம்போல் கூந்தலை காய வைக்கவும். ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனரின் நலன்கள் கழுவிய பின்னரும் நீண்ட நேரம் கூந்தலில் தங்கும். அதனால் கூந்தல் சிக்குகளற்றும் வலுவாகவும் இருக்கும்.

இதமாய் தழுவும் மென்மை, இதுவரைக் கண்டிராத அழகுடன் திகழும் கூந்தலைப் பெற நேரம் வந்து விட்டது.

ரூ. 2/- விலையுள்ள சிக்கனமான சாஷேயைப் பயன்படுத்திப் பாருங்கள்.

விரலில் மட்டும் நகம் இல்லை! உடனே அவனுக்கு அந்தப் பெரியவரின் கையி லிருந்த மோதிரத்தில் நகத்துண்டு ஒன்று பதிக்கப்பட்டிருப்பது நினைவுக்கு வந்தது. அவன் அவளைப் பார்த்தது முன் வாயிலுக் கருகில், ஆனால் இப்போது அவள் சமைய லறைப் பக்கமாக இருந்து வந்து கொண் டிருந்தாள். 'அது எப்படி?' என்று அவன் குழம்பினான்.

அவள் மாடிப்படிகளில் ஏறிச் செல்லும் ஓசை கேட்டது. அந்த ஓசை அடங்கும் வரை காத்திருந்து அவன் மெதுவாக அறையி லிருந்து ஹாலுக்கு வந்து முன்வாயிலை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தான். அவள் இப்போது மாடியிலிருந்து கீழே இறங்கி



"சார், நீங்க ரயில்வேயில் கொஞ்ச நாள் வேலை பார்த்திருக்கலாம். அதுக் குன்னு டொனேஷனையும் வாங் கிண்டு பேரனோட அட்மிஷன் கார்டுல ஆர்.ஏ.சி.ன்னு எழுதறது சரியாப் படல்ல!"

—டி.என். மகாலிங்கம்

வரும் ஓசை கேட்டது. உடனே சமையலறை யில் நுழைந்து கதவை ஒருக்களித்து அதன் பின்னே நின்று கொண்டான். இப்போது ஒரு விஷயம் அவனுக்குத் தெளிவாகப் புரிந்தது. அவளுக்கு யாரோ ஒருவன் வீட்டிற்குள் வந்திருக்கிறான் என்று தெரிந்திருக்கிறது - அதற்காகவே அவள் அவனுடன் ஒளிந்து பிடிக்கும் ஆட்டம் ஆடுகிறாள்!

திடீரென்று அவனுக்குக் கோபம் வந்தது. இருந்திருந்து ஒரு வயதான பெண்ணிடமா பயப்படுவது? அவளது ஒல்லிக் கையைப் போல உடம்பும் அவள் அணிந்திருக்கும் நீள கவுனுக்கு அடியில் ஒல்லியாகத்தானிருக்கும். அவளை நேருக்கு நேர் பார்த்தாலும் கூச்சலிடுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும் அவளால்? அவன் வெளியேறு வதைத் தடுக்க அவளால் முடியாது.

ரொம்பத் தாமதமாகி விட்டது. உடனே நூலகத்துக்குப் போய் விட வேண்டும் என்கிற அவசரத்துடன் அவன் வெளியில் வந்தான்; மாடிப்படிக்கருகே இருந்த டெலி போன் ரிசீவரை அவள் எடுப்பது தெரிந்தது. போலீசுக்கு போன் செய்து வீட்டில் திருடன் நுழைந்திருக்கிறான் என்று புகார் செய்யப் போகிறாளோ? ஆனால் அவள் ரிசீவரை எடுத்து போனுக்குப் பக்கத்தில் வைத்தாள். ஏன் அப்படிச் செய்கிறாள்? அந்தக் கிழவர் போன் செய்யாமலிருக்கும்படி தடுப்பதற்கா?

அவள் ரிசீவரை வைத்து விட்டு நிமிரும் போது பக்கத்திலிருந்த இரு இரும்புக் கைப் பிடி சட்டங்களை ஆதரவாக இரு கரங்களா லும் அழுத்திப் பிடித்துக் கொண்டு நிமிர்ந் தாள். அந்த இரு இரும்புக் கைப்பிடி சட்டங் களும் உடனே பெரிய இரைச்சலுடன் உடைந்து வளைந்து போயிற்று. நெட் குழம்பிப் போனான். மறுபடியும் நெஞ்சு தடதடவென்று அடித்துக் கொண்டது. நகர இயலாமல் அசைவற்று நின்றான். இப்போது அவள் திரும்பி அவனை நேருக்கு நேராகப் பார்த்தாள். பார்த்த அந்த முகத்தில் கண்கள் மட்டும், தசைகளின் பிடிப்பு எதுவுமில்லா மல் ஒட்டிக் கொண்டிருந்தன. மீதி முகமெல் லாம் தோலும் தசையும் நீக்கிய எலும்புக்கூடு!

அவள் அவனை நோக்கி வர ஆரம்பித் தாள். வரும் போது அவளது எலும்புக் கரங்கள் ஹாலுக்கு இருபுறமும் நீண்டு சுவர்களில் ஒட்டப்பட்டிருந்த வால் பேப்பர் களைப் பிடித்து கிழித்தெறிந்தன. கைக்கு எட்டும் வரை கிடைத்தவற்றைக் கிழித்துக் கொண்டே அவள் மெதுவாக அவனை நோக்கி முன்னேறினாள். எலும்புக்கூடான முகத்தில் கண்கள் மட்டும்!

கடைசி நிமிஷத்தில் நெட் நிறைய விஷயங்களைப் புரிந்து கொண்டான். தனது வேலை முடியும் வரையில் எவரும் குறுக்கிடக் கூடாது என்பதற்காகத்தான் அவள் டெலிபோன் ரிசீவரை எடுத்துக் கீழே வைத்திருக்கிறாள்! பெரியவர் தினசரி வீட்டிற்கு டெலிபோன் செய்வது, அவர் வரும் நேரத்திற்கு இவள் வெளியே வந்து அவர் கண்ணில் படாமல் இருக்க வேண்டும் என்பதை அறிவித்து எச்சரிக்கும் போன் கால் அது!

பெரியவர் மோதிரத்தில் பதிக்கப் பட்டிருக்கும் இவளது நகம்... இவள், அவர் பிடியில் இருக்கிறாளோ! எச்சரிக்கையின்றி கிழவருக்குத் தெரியாமல் வீட்டிற்குள் நுழை கிறவர்களை இவள்...!

*(நன்றி : 14 பயங்கர திகில் கதைகள். தமிழில் : தார்க்ஷியா. கண்ணதாசன் பதிப்பகம், 12, கண்ணதாசன் சாலை, சென்னை - 600 017)*

# பார்த்திபன் கனவு

## 20. பொன்னனும் சிவனடியாரும்

சிவனடியாரைப் பார்த்த பொன்னன் ஏன் அவ்வளவு ஆச்சரியமடைந்தான் என்று சொல்ல வேண்டியதில்லை. குதிரையிலிருந்து இறங்கி அந்தச் சிற்ப வீட்டுக்குள் நுழைந்தவர் ஒருவராயும், வெளியில் வந்தவர் இன்னொருவராயும் இருந்ததுதான் காரணம். இரண்டு பேரும் ஒருவர்தானா, வெவ்வேறு மனிதர்களா?

இந்த ஆச்சரியத்தையும் சந்தேகத்தையும் பொன்னன் முகத்தில் வெளிப்படுத்திய போதிலும் வார்த்தைகளினால் வெளியிடவில்லை. வெளியிடுவதற்கு அவனுக்குச் சந்தர்ப்பமும் கிடைக்கவில்லை. ஏனென்றால், அவனைப் பார்த்தவுடனேயே, சிவனடியார், "பொன்னா! எவ்வளவு சரியான சமயத்தில் வந்தாய்? இப்போதுதான் உன்னை நினைத்துக் கொண்டிருந்தேன். உறையூருக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். இன்னும் சற்று நேரம் கழித்து வந்திருந்தாயானால் என்னைப் பார்த்திருக்க மாட்டாய்...." என்று பரபரப்புடன் பேசிக் கொண்டே போனார். திண்ணையில் அவர்கள் உட்கார்ந்து கொண்டதும், "பொன்னா! சீக்கிரம் உன் சமாசாரத்தைச் சொல்லு! ரொம்ப முக்கியமான காரியம் ஏற்பட்டிருக்கிறது. அதைப் பற்றிப் பிறகு சொல்கிறேன். மகாராணியைப் பற்றி ஏதாவது தகவல் தெரிந்ததா?" என்று கேட்டார்.

பொன்னன், "தெரிந்தது, சுவாமி!" என்றான். பிறகு, தான் கொல்லிமலை அடிவாரத்துக்குப் போனது, அருவியைப் பிடித்துக் கொண்டு மேலேறியது, அங்கே ஒற்றைக் கை மனிதனும் குள்ளனும் வந்ததைக் கண்டு மறைந்திருந்தது, அவர்கள் திரும்பி வருவார்களென்று எதிர்பார்த்து மூன்று நாள் காத்திருந்துவிட்டுத் திரும்பியது ஆகிய விவரங்களைச் சொன்னான். காட்டாற்று வெள்ளத்திலிருந்து விக்கிரமனைக் காப்பாற்றியது முதலியவற்றைச் சொல்லவில்லை. சிவனடியாரைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொண்டு பிறகு சொல்லலாமென்று இருந்தான்.

ஒற்றைக் கை மனிதனுடைய தோற்றத்தைப் பற்றி விவரமாகச் சொல்லும்படி சிவனடியார் கேட்க, பொன்னன் அவ்விதமே அவனுடைய பயங்கரத் தோற்றத்தை வர்ணித்துவிட்டு, "சுவாமி! அந்த மனிதன் யார்? உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"பொன்னா! பார்த்திப மகாராஜாவின் பத்தினி அந்தக் கொல்லி மலையிலேதான் எங்கேயோ இருக்கிறாள். சந்தேகமில்லை. இதுவரையில் எனக்கு அர்த்தமாகாத விஷயங்கள் பல இப்போது அர்த்தமாகின்றன. அந்த மனிதன் யார் என்றா கேட்கிறாய்? மகா புருஷர்களும் பக்த சிரோமணிகளும் தோன்றிய இந்தப் புண்ணிய நாட்டில் நரபலி என்னும் பயங்கர வழக்கத்தைப் பரப்பி வரும் மகா கபால பைரவன்தான் அவன். நானும் எவ்வளவோ முயற்சி செய்து வருகிறேன், அவனை நேருக்கு நேர் காண வேண்டுமென்று. இன்று வரையில் முடியவில்லை. அவனைப் பற்றி இன்னொரு சந்தேகம் எனக்கிருக்கிறது. பொன்னா! ஏன் என் கண்ணில் அகப்படாமல் அவன் தப்பித் திரிகிறான் என்பதை ஒருவாறு ஊகிக்கிறேன்; எல்லா உண்மையையும் சீக்கிரத்தில் நாம் இரண்டு பேருமாகக் கண்டு பிடிக்கப் போகிறோம். பொன்னா! அதற்கு முன்னால் நமக்கு இன்னும் முக்கியமான காரியம் ஏற்பட்டிருக்கிறது. உனக்கு இப்போது ரொம்பவும் ஆச்சரியமளிக்கும் விஷயம் ஒன்றைச் சொல்லப் போகிறேன்.

அமரர் கல்கி

சோழநாட்டு இளவரசர் திரும்ப வந்திருக்கிறார் - " என்று சொல்லிச் சிவனடியார் பொன்னனுடைய முகத்தை உற்றுப் பார்த்தார்.

அவனுடைய முகத்தில் சிறிது வியப்புக் குறி காணப்பட்டதே தவிர, குதூகலமும் மகிழ்ச்சியும் தோன்றாதது கண்டு, சிவனடியார், "என்ன பொன்னா உனக்கு நான் சொல்வதில் நம்பிக்கை இல்லையா?" என்று கேட்டார்.

பொன்னன் இன்னும் சிறிது ஜாக்கிரதையுடன், "தங்களுடைய வார்த்தையில் எனக்கு அவநம்பிக்கை ஏற்படுமா, சுவாமி? ஆனால், இவ்வளவு அபாயத்துக்குத் துணிந்து இளவரசர் ஏன் வந்தார் என்றுதான் கவலையாயிருக்கிறது" என்றான்.

"உண்மைதான் பொன்னா! இளவரசருக்கு ஏதோ அபாயம் நேர்ந்து விட்டது. உறையூருக்குப் போகும் பாதையிலேதான் ஏதோ நேர்ந்திருக்கிறது. நாம் உடனே கிளம்பிப் போய்ப் பார்க்க வேண்டும். அருள்மொழித் தேவியைக் கண்டுபிடிப்பதற்கு முன்னால் இளவரசரைக் கண்டுபிடிக்க வேண்டும்". என்றார்.

பொன்னன் இப்போது உண்மையாகவே பேராச்சரியம் அடைந்தவனாய், "சுவாமி! இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது? இளவரசரை நீங்கள் பார்த்தீர்களா? எங்கே பார்த்தீர்கள்? அவருக்கு வழியில் ஆபத்து என்று என்ன முகாந்திரத்தைக் கொண்டு சொல்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"பொன்னா! இதென்ன உன்னிடம் இந்த மாறுதல்? நான் சொல்வதில் சந்தேகப்பட்டு முகாந்திரம் கேட்கக் கூட ஆரம்பித்து விட்டாயே? - நல்லது, சொல்கிறேன் கேள்! இளவரசரை நானே பார்த்தேன்; பேசினேன். நான்தான் உறையூருக்கும் அனுப்பினேன்...."

"எதற்காக சுவாமி?"

"எதற்காகவா? ஜன்ம தேசத்தைப் பார்த்துவிட்டு வரட்டும் என்றுதான். பொன்னா! ஒருவனுக்குத் தன்னுடைய பிறந்த நாட்டில் அன்பு எப்போது பூரணமாகும் என்று உனக்குத் தெரியுமா? கொஞ்ச காலமாவது அயல் தேசத்திலிருந்து விட்டுத் திரும்பி வரும்போதுதான். இரண்டு மூன்று வருஷம் அயல் நாட்டிலிருந்துவிட்டு ஒருவன் திரும்பித் தன் தாய்நாட்டுக்கு வரும்போது, பாலைவனப் பிரதேசமாயிருந்தாலும், அது சொர்க்க பூமியாகத் தோன்றும். வளங்கொழிக்கும் சோழ நாட்டைப் பற்றிக் கேட்க வேண்டுமா? உங்கள் இளவரசருக்குத் திரும்பவும் இந்நாட்டை விட்டுப் போகவே மனம் வராதபடி செய்ய வேணுமென்று விரும்பினேன்; பார்த்திப மகாராஜாவுக்குப் போர்க்களத்தில் நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றும் பொருட்டு. ஆனால் வழியில் இப்படி விபத்து ஏற்படக் கூடுமென்று எதிர்பார்க்கவில்லை. ஐயோ பகவானே! நாளை அருள்மொழி ராணி கேட்டால் நான் என்ன செய்வேன்!..."

'சுவாமி! இளவரசருக்கு என்ன ஆபத்து நேரிட்டது? அது எப்படி உங்களுக்குத் தெரியும்?" என்று பொன்னன் கேட்டான்.

"இன்றைக்கு ரொம்பக் கேள்விகள் கேட்கிறாய், பொன்னா! என்ன ஆபத்து நேர்ந்தது என்று எனக்குத் தெரியாது. ஆனால் ஏதோ நேர்ந்து மட்டும் இருக்கிறது. அதோ அந்தக் குதிரைக்கு, பகவான் பேசும் சக்தியை மட்டும் அளித்திருந்தால், அது சொல்லும்..... ஆமாம், இந்தக் குதிரைமேல் ஏறிக்கொண்டு [illegible] இளவரசர் கிளம்பினார். இதே [illegible]இருந்துதான் புறப்பட்டார். ஆனால், இரண்டு நாளைக்குப் பிறகு குதிரை மட்டும் தனியாகத் திரும்பி வந்திருக்கிறது. இளவரசருக்கு எங்கே, என்ன நேர்ந்தது என்பதை நாம் இப்பொழுது உடனே போய்க் கண்டு பிடிக்க வேண்டும். நீயும் என்னோடு வருகிறாயல்லவா, பொன்னா! உனக்குக் குதிரை ஏறத் தெரியுமா?" என்று சிவனடியார் கேட்டார்.

"தெரியும் சுவாமி! ஆனால், நான் தங்க



னுடன் வருவதற்கு முன்னால் தங்களிடம் இன்னும் சில விஷயங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்றான் பொன்னன்.

"என்ன?" என்று சிவனடியார் தம் காது களையே நம்பாதவர் போல் கேட்டார்.

''ஆமாம் இன்னும் சில விவரங்கள் தெரிய வேண்டும். முக்கியமாகத் தாங்கள் யார் என்று சொல்ல வேண்டும்'' என்றான்.

சிவனடியாரின் முகத்தில் புன்னகை அரும்பியது.

"ஓஹோ! அப்படியா?" என்றார்.

"சற்று முன்னால் சாலையில் தாங்கள் குதிரை மீது வந்ததை நான் பார்த்தேன். அப்போது வேறு உருவம் கொண்டிருந்தீர்கள்; இந்த வீட்டுக்குள்ளே போய் வெளியே வரும் போது வேறு ரூபத்தில் வந்தீர்கள். ஆனால், இந்த இரண்டு உருவமும் தங்களுடைய சொந்த உருவம் அல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தச் சந்தேகம் சுவாமி! எனக்கு வெகுநாளாகவே உண்டு. ஆனால், இப்போது கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. உண்மையில் தாங்கள் யார் என்று சொன்னால்...."

''சொன்னால் என்ன?"

''சுவாமி! மிகவும் முக்கியமான ஒரு விஷயம் - தாங்கள் அறிந்து கொள்ள விரும்பக்கூடிய விஷயம் எனக்குத் தெரியும், அதைச் சொல்லுவேன், இல்லாவிட்டால் என் வழியே நான் போவேன்."

சிவனடியார் சற்று யோசித்தார். பொன்னனுடைய முகத்தில் உள்ள உறுதிக் குறியைக் கவனித்தார்.

''பொன்னா! அவசியம் நீ தெரிந்து கொண்டுதான் தீரவேண்டுமா?"

"ஆமாம், சுவாமி."

''அப்படியானால், சொல்கிறேன். ஆனால் நீ எனக்கு ஒரு வாக்குறுதி கொடுக்க வேண்டும். வேறு யாரிடமும் சொல்லக் கூடாது. பரம இரகசியமாய் வைத்திருக்க வேண்டும்" என்றார்.

"அப்படியே செய்கிறேன், சுவாமி."

"போர்க்களத்தில் வீர மரணம் அடைந்த பார்த்திப மகாராஜாவின் ஆணையாகச் சொல்வாயா?"

"பார்த்திப மகாராஜாவின் ஆணையாகச் சொல்கிறேன், சுவாமி!"

''அப்படியானால், இதோ பார்!'' என்று சிவனடியார் அன்று போர்க்களத்தில் பார்த்திபன் முன்னால் செய்தது போல் தம்முடைய ஜடா மகுடத்





# அருள்வாக்கு

**தா**வர வர்க்கத்தில் பூச்செடி, பழ மரம் என்று இரண்டு. பூச்செடியில் அழ காகப் புஷ்பம் உண்டாகிறது. அதன் டிஸைன்களில் அலாதி ஆர்டர். அது மட்டுமில்லை; பர்பஸும் இருக்கிறது. இந்த அழகிலேதான் தேனீ வசீகரமாகி வந்து தேன் குடிக்கிறது. அதற்கு ஆஹாரம் கொடுக்கிற பர்பஸுக்குள் ளேயே ரஹஸ்யமாக, அதைவிடப் பெரிய இன்னொரு பர்பஸும் ஃபுல்ஃபில் ஆகிறது. தேனீ செய்கிற மகரந்த பரி வர்த்தனையினால்தான் இந்தச் செடி இனவிருத்தி பெறுகிறது. இப்படி இதிலே ஜட வஸ்து பண்ணவே முடி யாததான, ரொம்பவும் புத்திபூர்வமான, 'ட்ரிக்' வேறே இருக்கிறது.

இன்னொரு வேடிக்கை கூட. ரொம்ப வும் வர்ண விசித்திரமில்லாத பூவாகச் சிலது உண்டாகின்றன; அவை தேனீயை ஆகர்ஷணம் பண்ணுவதற் காக ஏகப்பட்ட வாஸனையை வைத்துக் கொண்டிருக்கின்றன. ஸுகந்தம் நிறைய இருக்கிற மல்லிகை, மகிழ், சம்பங்கி, மனோரஞ்ஜிதம் மாதிரிப் புஷ்பங்களில் கலர் விசித்ரம் இல்லை. கலர் விசித் ரம் நிறைய இருக்கும் கனகாம்பரம், துலுக்க சாமந்தி, காகிதப் பூ வகைகள் முதலியவற்றில் வாஸனை இல்லை. தேனீயை இழுக்க ஏதோ ஒரு ட்ரிக் போதும், இரண்டும் வேண்டாம் என்று இதிலே ஒரு எகானமி (சிக்கனம்) வேறே! (ரோஜா மட்டும் விதிவிலக்கு.) ஜட வஸ்து இப்படியெல்லாம் கெட்டிக் கார ப்ளான் போட்டு அதன் பிரகாரம் பண்ண முடியுமோ?

இன்னொரு வேடிக்கை கூட! நேச்சர் - இயற்கை - என்று சொல்வதில் நிறைய 'வெரைய்டி'. தினுசு தினுசாகப் பார்க்க வேண்டும் என்கிற காவிய புத்தி யதேஷ்டமாகத் தெரிகிறது. வாஸனைப் பூ - கலர்ப்பூ வித்யாஸம் போலவே கார்த்தாலே பூக்கிறது - ராத்திரி பூக் கிறது என்று ஒரு வித்யாஸம். இதிலே ராத்திரி பூக்கிறதுதான் அந்த வேளை யில் கண்ணுக்குத் தெரியும்படியாக வெள்ளை வெளேரென்று மல்லிகை ஜாதிகள், பன்னீர்ப்பூ, ராமபாணம் என் கிற நிலசம்பங்கி, இப்படி இருக்கின்றன.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸுவாமிகள்.

---

தையும் மீசை தாடிகளையும் நீக்கினார்.

பொன்னன், "பிரபோ! தாங்கள் தானா?" என்று சொல்லி, அவர் முன்னால் சாஷ் டாங்கமாக நமஸ்கரித்தான்.

"இதற்கு முன்னால் வள்ளி உனக்குச் சொல்லவில்லையா? பொன்னா!" என்று சிவனடியார் மீண்டும் ஜடாமகுடம் முதலிய வற்றைத் தரித்துக் கொண்டு கேட்க, "வள்ளி பெரிய கள்ளியாயிற்றே?. நிஜத்துக்கு மாறான விஷயத்தைச் சொன்னாள். தங்களைத்தான் அவள் சொல்கிறாள் என்று நான் சந்தேகித் துக் கேட்டேன். இல்லை தாங்கள் பார்த்திப மகாராஜா என்று ஒரு பெரிய பொய் புளுகி னாள். அவளை இலேசில் விடுகிறேனா, பாருங்கள்! எனக்கும் இப்போது ஒரு பெரிய இரகசியம் தெரியும், அதை அவளுக்குச் சொல்வேனா?" என்றான்.

பிறகு, பொன்னன் காட்டாற்று வெள் ளத்தில் தான் இறங்கி இளவரசரைக் காப் பாற்றியது முதல் அவரைக் குந்தவிதேவி தன் பல்லக்கில் ஏற்றி அழைத்துச் சென்றது வரை யில் எல்லா விவரங்களையும் சவிஸ்தார மாய்ச் சொன்னான்.

இதற்கு முன்னாலெல்லாம் எதற்கும் ஆச் சரியம் அடையாதவராயிருந்த சிவனடியார் இப்போது அளவிட முடியாத வியப்புடன் பொன்னன் கூறிய விவரங்களைக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, "பொன்னா! உங்கள் இளவரசரைப் பற்றிய கவலை தீர்ந்தது. விக்கிரமன் பத்திரமாயிருப்பான். நாம் அருள்மொழி ராணியைத்தான் தேடி விடு தலை செய்ய வேண்டும்" என்றார்.

(தொடரும்)



# ஆட்டிப் படைக்கும் ஆவிகள்!

**நம் நாட்டில் மட்டுமல்லாது விஞ்ஞானம் வளர்ந்த மேல்நாடுகளிலும் 'ஆவி' சமாசாரம் மக்களை ஆட்டிப்படைக்கிறது என்றுதான் தகவல்கள் சொல்கின்றன.**

●● மூடநம்பிக்கைகள் எதிலும் சிக்கிக் கொள்ளாத ஒரு பெரும் பகுத்தறிவுவாதி. இங்கிலாந்துக்காரர். அவருக்கு ஒரு நண்பர். நேரில் அதிகம் பார்த்துப் பழகியதில்லை. கடிதம் மூலம்தான் தொடர்பு. அந்தக் கடித நண்பர் இறந்து விட்டதாக ஒரு நாள் தகவல் வர, நம் ஹீரோ ரொம்ப வருத்தப்பட்டிருக்கிறார். ஏற்கெனவே தொழிலில் சில சிக்கல்கள்; பிரச்னைகள். கவலைகளை மறந்து கொஞ்ச நேரம் டீவி. பார்க்கலாமென்று உட்கார்ந்திருக்கிறார். வீட்டில் வேறு யாரும் இல்லை... இவர் டீ.வியில் முழு கவனம் செலுத்த... ஏதோ ஒரு உள்ளுணர்வு... பக்கத்தில் யாரோ உட்கார்ந்திருப்பது போல... சட்டென்று திரும்பிப் பார்த்தால்.... செத்துப் போன நண்பர்! அதிர்ச்சி அடைவதா? நண்பரை வரவேற்று உபசரிப்பதா?

நலம் விசாரித்ததோடு அந்த 'நண்பர் ஆவி' - இவரது தொழிலில் ஏற்பட்டுள்ள சிக்கலுக்குத் தீர்வு வேறு சொல்லிப் போனது!

●● நதானியல் ஹாத்ரோன் என்றொரு அமெரிக்க எழுத்தாளர். இவருக்கு ஒரு வித்யாசமான 'ஆவி' அனுபவம்... எழுத்தாளருக்கு ரொம்ப நெருக்கமான ஒரு பாதிரியார் இறந்து விட்டார். ஆனாலும், தினசரி எழுத்தாளர் வீட்டுக்கு வந்து, அவரது படிக்கும் அறையில் உட்கார்ந்து கொஞ்ச நேரம் அரட்டை அடித்து விட்டுப்

போகுமாம் அந்தப் பாதிரியார் ஆவி! இவர், இதைத் தம் நண்பர்களிடம் சொல்ல, வியந்து போய் அவர்கள் 'ஆவி' அரட்டை அடிப் பதைப் பார்க்க வந்தால் - காலி நாற்காலியைத்தான் பார்க்க முடிந்திருக் கிறது! ஃபாதர் ஆவி, எழுத்தாளர் கண்களுக்கு மட்டும்தான் தெரிந்தது!

●● பாழடைந்த, மிகப் பழைய வீடுகளைப் 'பேய் வீடு' என்று கதைகளில் குறிப்பிடுவார்கள்; ஒரு வசதிக்காக. இதை ஆராய்ச்சி செய்யப் புறப்பட்ட டயன் நார்மன், பல பழைய, பாழடைந்த வீட்டுச் சொந்தக் காரர்களை அணுகி, 'உங்கள் வீட்டில் பேய் வாழ்கிறதா'(?) என்று விசாரித் திருக்கிறார்.

ஆச்சர்யம், யாரும் மறுக்கவில்லை! மாறாக, நூற்றுக்குத் தொண்ணூறு சதவிகிதம் பேர் தங்கள் வீடுகளில் 'ஆவி' உலவுவதாகத் தாங்கள் நம்புவதாகச் சொல்லியிருக்கிறார்கள்!

●● ஆவிகள், கனவில் வருமா? வரும் என்கிறது ஒரு பிரெஞ்ச் நாட்டுத் தகவல்!

பிரபல பிரெஞ்ச் நடிகர் ஒருவர், தம் கனவில், இறந்து போன தம் தாய் அழைப்பதைக் கண்டார் : 'மகனே வந்து விடு'. குரல் கேட்டதும் சைகை தெரிந்ததும் உண்மை என்று நம்பி, அந்த நடிகர் தம் நண்பர்களை அழைத்து, தமது இறுதிச் சடங்குகளுக்கு ஏற்பாடு செய்து விட்டார்!

சர்ச்சில் வழிபாடெல்லாம் முடித்து வெளியே வந்தவர், ஊரே பார்த்துக் கொண்டிருக்க, கீழே விழுந்து திடீரென்று இறந்து விட்டார்!

●● முதல் உலகப் போரின் உடனடிக் காரணம், 'ஆஸ்திரிய இளவரசர் கொலை' என்று வரலாறு சொல்கிறது. அந்தக் கொலை நிகழப் போவதை முன்னதாகவே ஒரு 'கனவு' சொல்லி விட்டதை எந்த சரித்திர நூலாவது சொல்கிறதோ?

ஆஸ்திரிய இளவரசரின் ஆசிரியர் ஒருவருக்குத்தான் அப்படிப்பட்ட 'கனவு' வந்திருக்கிறது! தம் மாணவன் காரில் வைத்து சுடப்படுவதாகக் கனவு வந்த உடனே அலறி எழுந்து, தகவல் அனுப்புவதற்குள் செய்தி வந்து விட்டது! இளவரசர் சுட்டுக் கொலை!

●● படுக்கை அறை விளக்கை அணைத்து விட்டுப் படுத்தார் ஒருவர். ஆனால் என்ன அதிசயம்! அவர் உடம்பு பறக்க ஆரம்பித்தது! பிரகாசமான ஒளி வெள்ளத்தின் நடுவே தாம் பறப்பதை அவர் உணர்ந்தார்! பறந்தபடியே தம் தந்தை வீட்டுக்குப் போய், படுத்த படுக்கையாய் இருக்கும் அவரை நலம் விசாரித்துவிட்டு மீண்டும் திரும்பி, தம் வீட்டுக்கு வந்து படுத்துவிட்டார்!

கனவா! பிரமையா!

"இல்லவே இல்லை; நிஜம்தான்; நீ நேற்று இரவு என்னை வந்து பார்த்துப் போனாய்!" என்று உறுதிப்படுத்தினாராம் தந்தை!

தொகுப்பு : **ரசிகன்**

நன்றி : **'Into the Unknown'**
**— Readers' Digest** வெளியீடு.

**"டேய்.... எதுக்குடா ஃபேன் மேலே விஸ்கியைத் தெளிக்கிறே?"**

**"நல்லாச் 'சுத்து மே'ன்னுதான்!"**

**எம். அசோக்ராஜா**



"குடையை எங்கே வச்சோம்னு யோசனை பண்றீங்களா, பெரியவரே?"

"ஊகூம், இந்தக் குடையை எங்கே ருந்து கிளப்பிட்டு வந்தீங்கன்னு வீட்டுக் காரி கேட்டா... என்ன பதில் சொல்றதுன்னுதான் யோசனையா இருக்கு....!"

- பெ. கலாசாமி



**"நீலா,** உன்னை எடிட்டர் கூப்பிடறாரு." ஒருவர் கூவி விட்டுத் தம் வேலையைப் பார்க்க விரைந்தார்.

அவசரமாகக் கையிலிருந்த தாள்களைச் சரிசெய்து எடுத்துக் கொண்டு செங்கோடன் இருந்த தனியறைக்குப் போனாள்.

"சார்... நீங்க கேட்டிருந்த செய்திக் கட்டுரையைச் சொன்னபடியே நாலரைக்குள் முடித்துவிட்டேன்... இதோ" என்று நீலா தாள்களை மேசை மேல் வைத்தாள்.

செங்கோடன் பதில் சொல்லவில்லை. அவர் முகத்தில் சிறு புன்னகை. நீலாவின் முகத்தை ஒரு முறை உற்றுப் பார்த்தார். மௌனம் நிலவியது.

"என்ன சார்... அடுத்த 'அசைன்மென்ட்' கொடுக்கத் தயாரா?" என்ற நீலாவின் குரல் உற்சாகத்தை உணர்த்தியது.

"நீலா, நான் சொல்லப் போவது முக்கிய விஷயம். கவனமாகக் கேட்டுக்க... உனக்கு ஆராய்ச்சியாளர் டாக்டர் பிரபு பற்றித் தெரியுமா?"

"டாக்டர் பிரபு" என்று நீலா ஒருமுறை சொல்லிப் பார்த்துக் கொண்டாள். "தெரியுமே... அவர் தமிழ்நாட்டில் பெயர் பெற்ற ஒரு விஞ்ஞானி... அவருடைய உதவியாலேதானே இங்கே விவசாயம்



# மாண்புமிகு கம்சன் 1

## மர்மத் தொடர்

இந்த அளவு முன்னேறி இருக்கு... அவருடைய ஆராய்ச்சிக் கட்டுரைகள் ஏராளம்னு கேள்விப்பட்டேன். நான் கூட இரண்டு, மூணு படிச்சிருக்கேன்...'' நீலா பேசிக் கொண்டே போயிருப்பாள். செங்கோடனின் குரல் கனைப்பைக் கேட்டதும் நிறுத்தினாள்.

''நீலா... உனக்கு டாக்டர் பிரபுவின் ஆராய்ச்சி பற்றித் தெரிந்திருக்கும்னு நான் நினைச்சது சரிதான். அதனாலேதான் உனக்கு ஒரு புது 'அசைன்மெண்ட்' கொடுக்கப் போறேன்...''

''டாக்டர் பிரபுவின் ஆராய்ச்சியைப் பற்றி மக்களுக்கு எளிய முறையில் எழுதித் தரச் சொல்லப் போறீங்க, இல்லையா?''

''இல்லை, நீலா''

''பிறகு, வேறு என்ன செய்யணும்?''

''இதுவரை நீ செய்து வந்தது சாதாரணமான நிருபர் வேலைதான்... இனி செய்யப் போறது, இப்ப செய்யப் போறது - பிரபு விஷயத்துலே - கொஞ்சம் துப்புத் துலக்கிற வேலை மாதிரி... 'இன்வெஸ்டிகேடிவ் ரிப்போர்ட்டிங்'னு சொல்வாங்களே... அந்த வகையைச் சேர்ந்தது...''

'இன்வெஸ்டிகேடிவ் ரிப்போர்ட்டிங்...' புதுவிதமான வேலை தனக்கு... நீலாவின் மனம் படபடத்தது. செங்கோடனை உற்றுப் பார்த்தாள்.

''மேலே சொல்லட்டுமா நீலா'' என்று செங்கோடன் தொடர்ந்தார்.

''டாக்டர் பிரபு விவசாயத் துறைக்கு நிறைய ஆராய்ச்சிக் கண்டுபிடிப்புகளைப் பயன்படுத்துகிறார். தமிழ்நாட்டில் விவசாய விளைச்சல் அதிகரிக்க அவருடைய ஆராய்ச்சி முக்கிய காரணம் - இதெல்லாம் நிறைய பேருக்கு ஏற்கெனவே தெரியும். ஆனால்...'' என்று செங்கோடன் நிறுத்தினார்.

''என்னன்னு சொல்லுங்க சார்'' நீலா துரிதப்படுத்தினாள்.

''டாக்டர் பிரபு தற்போது செய்து வரும் ஆராய்ச்சி பற்றி எனக்கு ஒரு தகவல் கிடைத்திருக்கிறது. என்ன தகவல் என்பதை இப்போது உன்னிடம் சொல்லப் போவதில்லை... சொன்னால் உன் வேலை தடைப்படும். தடம் மாறும். நீயாகவே இவருடைய இந்த ஆராய்ச்சி பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ள முயற்சி செய்யணும். கவனமாய் இருக்கணும். எனக்கு விவரங்கள் சொன்னால் மட்டும் போதும் எதையும் கட்டுரையாகவோ, செய்தியாகவோ எழுத வேண்டாம்... சரியா நீலா?'' என்று செங்கோடன் முடித்தார். அவருடைய குரலில் எச்சரிக்கையின் அறிகுறிகள் ஒலித்தன. நீலாவுக்கு ஆர்வம் கட்டுக்கடங்காமல் பெருகியது.

''சார், இதுபோல 'இன்வெஸ்டிகேடிவ் ரிப்போர்ட்டிங்' நான் செய்ததில்லையே... எனக்குத் துணைக்கு ஓர் ஆள் இருந்தால் நல்லா இருக்கும்னு நினைக்கிறேன்'' என்று நீலா கேட்டபோது செங்கோடன் தலையை 'ஆமாம்' என்பது போல அசைத்தார்.

''நானும் அதே முடிவுக்குத்தான் வந்தேன், நீலா. உனக்குத் துணையாக மூர்த்தி வருவான், சரிதானே?'' என்றார் செங்கோடன்.

''ரொம்ப சரி, துணைக்குத் துணையும் ஆயிற்று; ஃபோட்டோ எடுக்கக் காமிரா மேனும் ஆயிற்று...!''

''நீலா உன் திறமையில் எனக்கு நம்பிக்கை நிறைய உண்டு... ஆனால் இது சாதாரண 'அசைன்மெண்ட்' இல்லை... நீயும் மூர்த்தியும் ரொம்ப கவனமாயிருக்கணும்'' என்று மீண்டும் எச்சரித்தார்.

"இதை எப்ப சார் நாங்க ஆரம்பிக்கணும்?" நீலா சொல்லி முடிக்கவும், செங்கோடனின் அறைக் கதவைத் திறந்து கொண்டு காமிரா சாதனங்களுடன் மூர்த்தி உள்ளே நுழைய வும் சரியாக இருந்தது.

"நீலா, மூர்த்தி... நீங்க இரண்டு பேரும் இன்னிக்குச் சாயங்காலம் ஏழு மணிக்கு தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்துக் குப் போகணும்... அங்கே டாக்டர் பிரபு வுக்கு ஒரு பாராட்டு விழா நடக்குது. அதை 'கவர்' பண்ணிக்கிட்டு, டாக்டர் பிரபுவிடம் ஒரு பேட்டிக்கு ஏற்பாடு செய்துவிட்டு வாங்க.... அதுக்கப்புறம் மற்ற விவரங்கள் பார்க்கலாம்...."

நீலா கைக்கடிகாரம் பார்த்தாள். மணி ஐந்தரை என்றது. அதை செங்கோடன் கவ னித்தார்.

"நீலா... உன்னை மயிலாப்பூர் வரை நானே கொண்டு விடுகிறேன். வீட்டுக்குப் போயிட்டு நீ தேனாம்பேட்டை போகலாம்... இன்னும் நேரம் இருக்கு" என்றார் செங் கோடன்.

"அப்ப நான் தேனாம்பேட்டை மைதா னத்தில் உன்னைப் பார்க்கிறேன் நீலா" என்று மூர்த்தி புறப்பட்டான்.

"நான் வாசலில் காத்திருக்கேன், சார்!" என்று கூறி நீலாவும் விரைந்தாள்.

மூர்த்தி, நீலா இருவரும் அறையை விட்டு வெளியேறியதும், செங்கோடன் டெலி போனில் எண்களைச் சுழற்றினார்.

"ஹலோ" என்றது ஒரு ஆண் குரல் மறு பக்கம்.

"நீலாவும் மூர்த்தியும் தேனாம்பேட்டை வர்றாங்க... நான் சொன்னது ஞாபகமிருக் கட்டும்" என்று போனை செங்கோடன் வைத்தார்.

தேனாம்பேட்டை மைதானம் நிரம்பி வழியவில்லை. ஆனாலும் நிறைய பேர் கூடி யிருந்தார்கள். நிகழ்ச்சி ஆரம்பிக்க சில நிமி டங்கள் இருந்தன. டாக்டர் பிரபு முன் வரி சையில் நண்பர்களிடம் பேசிக் கொண்டிருந் தார். பிரபுவின் மனைவி சாந்தி அவர்களு டைய ஆறு வயதுப் பையன், நாலு வயதுப் பெண் மூவரும் முன்வரிசையில் உட்கார்ந் திருந்தனர்.

"டாக்டர் பிரபு, உங்களுக்கு எப்போதோ கிடைச்சிருக்க வேண்டிய பாராட்டு இது— இத்தனை நாள் இழுத்துட்டாங்க..." நண்பர் உண்மையான எரிச்சலுடன் சொன்னார்.

"இப்போவாவது நடக்குதே அதைப் பாருங்க" என்றார் இன்னொருவர்.

"எனக்குப் பாராட்டு விழா அது இதுன்னு ரொம்பப் பிடிக்காதுன்னு உங்களுக்குத் தெரி யாதா... நான் செய்யும் ஆராய்ச்சியை மக்கள் மேலும் புரிந்து கொள்ள வேண்டும் என்ப தற்காகத்தானே நான் இந்த விழாவுக்கு ஒப்புக் கொண்டேன்" என்றார் டாக்டர் பிரபு. தூரத்தில் வந்து கொண்டிருந்த இரு வரைப் பார்த்தார்.

"அதோ என்னுடன் ஆராய்ச்சியில் ஈடு பட்டிருக்கும் டாக்டர் பாலுவும் டாக்டர் சாலமனும் வருகிறார்களே" என்று சொன்ன போது பிரபுவின் குரலில் வியப்புக்கான அறிகுறிகள் இருந்தன.

எப்படி ஆச்சர்யப்படாமல் இருக்க முடி யும்? பிரபுவின் ஆராய்ச்சிக் கூடத்தில் டாக் டர் பாலுவும் சாலமனும் வேலைக்குச் சேர்ந்து சுமார் ஆறு ஆண்டுகள் ஆயின. பிரபுவின் திறமையான மேற்பார்வையில் பாலு, சாலமன் இருவருக்குமே பல 'சயின்ஸ் ஜர்னல்'களில் அவர்களின் கண்டுபிடிப்புகள் பற்றி கட்டுரைகள் வந்துள்ளன. பிரபு-பாலு-சாலமன் என்ற வரிசையில் பெயர்கள் எழுதப்பட்டன - இந்த வரிசையை பாலு-சாலமன் என்று மட்டுமே ஆக்க வேண்டு மென இருவருமே விரும்பினார்கள். பிரபு வுக்கு இதுபற்றி எப்போதோ புரிந்துவிட்டது. ஆனால் தன் ஆராய்ச்சியை நிறுத்தவோ அல் லது வேறு இடத்தில் ஆராய்ச்சி வேலைக் குப் போகவோ பிரபு விரும்பவில்லை. பாலு, சாலமன் இருவரும் ஆராய்ச்சியில் பொறுப் புடன் இருந்ததால் அவர்கள் மீது பிரபு நடவடிக்கை ஏதும் எடுக்கவும் இயலவில்லை. பிரபுவுக்கும் அந்த இரு விஞ்ஞானிகளுக்கும் இந்த மௌன மோதல் பின்னணியிலிருக் கவே, அவர்கள் பாராட்டு விழாவுக்கு வந் தால் பிரபுவுக்கு ஆச்சர்யம் ஏற்படாதா?

பாலு, சாலமன் இருவரும் பிரபு இருந்த இடத்துக்கு வந்தார்கள்.

"ஹலோ டாக்டர் பிரபு, கங்கிராஜுலேஷன்ஸ்!"

"தேங்க் யூ வெரி மச்... நீங்க இரண்டு பேரும் வந்தது பற்றி நான் பெருமைப்படு கிறேன்" என்று பிரபு சொன்னபோது பாலு வும் சாலமனும் ஒருவரையொருவர் பார்த் துக் கொண்டனர்.

"நாங்க வராம இருப்போமா... அமைச்சர் ரங்கதுரை வேறே வராரில்லே, அவரையும் பார்த்த மாதிரி இருக்கும்" என்று பாலு சொல்ல, சாலமன் தலையை ஆட்டினான்.

"வாங்க... உங்க இரண்டு பேரையும் மேடையிலிருந்து அறிமுகப்படுத்தி வைக் கிறேன்" என்று அவர்களைக் கூட்டிக் கொண்டு மேடையை நோக்கி பிரபு நடந்தார்.

வழக்கம் போல் அமைச்சர் ரங்கதுரை அரை மணி தாமதமாக வரவே நிகழ்ச்சி ஏழரை மணிக்குப் பிறகுதான் தொடங்கியது.



# ஈஸ்வரி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

ஈஸ்வரி குரூப் நிறுவனங்கள்

4 எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை,
சென்னை - 600 018.
தொலைபேசி: 455349, 459557, 457583.




கிளைகள் : பாரிமுனை ஃபோன்: 560767, தி.நகர் ஃபோன்: 8259661, புரசைவாக்கம் ஃபோன்: 5324937, 5324940, குரோம்பேட்டை ஃபோன்: 405845, திருவல்லிக்கேணி ஃபோன்: 841187, நங்கநல்லூர் ஃபோன்: 2345891, சாலிக்கிராமம் ஃபோன்: 428650, பாண்டிச்சேரி ஃபோன்: 31830.

# டெபாசிட் திட்டங்கள்

## ஃபிக்சட் டெபாசிட்

| காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
|---|---|---|
| 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு | 24% | ரூ. 10,000/- |

ஊக்கத்தொகை 1%

## க்யூமுலேடிவ் டெபாசிட்

| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத் தொகை | வருடாந்தர வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 13 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 27.70% | 1.5% |
| 25 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,000/- | 28.80% | 3.0% |
| 37 மாதம் | ரூ.15,000/- | ரூ.30,000/- | 32.4% | 4.5% |

| ஈஸ்வரி பாண்ட் | திருமலா பாண்ட் |
|---|---|
| குறைந்த பட்சத்தொகை | குறைந்த பட்சத்தொகை |
| ரூ.25,000 இரு மடங்காகிறது 37 மாதங்களில் ரூ.50,000/- ஊக்கப்பரிசு | ரூ.50,000 மும் மடங்காகிறது 60 மாதங்களில் ரூ.1,50,000/- ஊக்கப்பரிசு |
| 4 கிராம் தங்கக்காசு | 8 கிராம் தங்கக்காசு |

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்

LOTUS/95

உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்.




மூர்த்தி முன் வரிசையின் அருகே நின்று காமிராவை கிளிக்கிக் கொண்டிருந்தான். நீலா இன்னும் வரவில்லை. அடிக்கடி அவள் வருகிறாளா என்று பார்வையைச் சுழற்றினான்.

அமைச்சர், டாக்டர் பிரபுவுக்கு ரோஜா மாலையைப் போட்டு, பாராட்டிப் பேசி பாராட்டுப் பத்திரத்தைக் கொடுத்தார். பிரபு மலர்ந்த முகத்துடன் கூடியிருந்தோருக்கு வணக்கம் தெரிவித்தார்.

"தமிழகத்தின் நெல் விளைச்சல் மட்டுமில்லாமல் பழ வகைகளையும் அதிகரிக்க டாக்டர் பிரபுவின் ஆராய்ச்சிகள் பயன்பட்டு வருகின்றன என்பதில் எனக்கும் அரசுக்கும் மிக்க திருப்தி, மகிழ்ச்சி..." என்று அமைச்சர் ரங்கதுரை ஆரம்பித்து, பிறகு பேச்சை முடித்த போது மணி எட்டரையைத் தாண்டியது.

"இப்போது, டாக்டர் பிரபுவை அவருடைய ஆராய்ச்சியைப் பற்றிப் பேச நான் அழைக்கிறேன்" என்று ரங்கதுரை அறிவித்த போது பலத்த கைதட்டல்.

டாக்டர் பிரபு ஒலிபெருக்கியின் முன் வந்தார். மூர்த்தி ஒரு படத்தை 'க்ளிக்' செய்தான். அப்போது வியர்த்துக் கொட்டிக் கொண்டு நீலா அவசர அவசரமாக கையில் பேனா, ஸ்டெனோ நோட்டுடன் வந்து நின்றாள்.

"என்ன நீலா ஏழு மணிக்கு வர வேண்டியவள் இப்படி சாவகாசமாய் வந்து நிக்கிறியே!'' மூர்த்தி சற்று எரிச்சலுடன் கேட்டான்.

"மூர்த்தி... நீ இப்படி சொல்லுவேன்னு எனக்குத் தெரியும்.... உனக்கு விவரமாய் அப்புறம் சொல்றேன்... இப்பத்தானே டாக்டர் பிரபு பேசப் போறார். எனக்குக் கொஞ்சம் நோட்ஸ் எடுக்கணும்'' என்று மூர்த்தியை சமாதானப்படுத்தினாள் நீலா.

மூர்த்தி பதில் பேசாமல் தன் வேலையில் ஈடுபட்டான்.

டாக்டர் பிரபுவின் குரல் ஒலிக்கத் தொடங்கியது.

''அமைச்சர் ரங்கதுரை அவர்களே, அருமை நண்பர்களே...'' என்று முன்னுரை போட்டு சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டு மேலே தொடர்ந்தார்.

"என்னுடைய பரிசோதனையின் சாதனைகளைப் பாராட்டுகின்ற இந்த நேரத்திலே என்னுடன் உழைக்கும் இரண்டு விஞ்ஞானிகளையும் நான் அறிமுகப்படுத்தக் கடமைப்பட்டுள்ளேன்" என்று பாலு, சாலமன் இருவரையும் டாக்டர் பிரபு அறிமுகப்படுத்தினார். கைதட்டல்கள் தொடர்ந்தன. இருவரும் சற்று வெட்கத்துடன் எழுந்து நின்று வணக்கம் தெரிவித்தார்கள்.

டாக்டர் பிரபு மேலும் பேசினார். தன் மனைவி குழந்தைகளை அறிமுகப்படுத்தினார். இதுவரை எது மாதிரியான ஆராய்ச்சிகள் என்பது பற்றிச் சொல்லிவிட்டு, இனி என்ன செய்யலாம் என்பதைக் கோடி காட்டினார்.

''தற்போது நாங்கள் செய்துவரும் ஆராய்ச்சியின் மையக் கருத்து, பூச்சிக் கொல்லி மருந்துகளை எந்த அளவு பயன்படுத்த வேண்டும்; அதனால் மக்களுக்கு ஏதாவது நோய்கள் உண்டாகுமா என்பது பற்றி... இதில் ஒரு முக்கிய மருந்து பூச்சி ஒழிப்புக்கு மட்டுமில்லாமல் வேறொரு காரணத்துக்கும் பயன்பட வாய்ப்புண்டு. அதுபற்றி விரிவாக இன்னொரு சந்தர்ப்பத்தில் கூறுவேன்!'' என்று பிரபு முடித்தபோது, கைதட்டல் நீண்டு ஒலித்தது.

பாலுவும் சாலமனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். மெல்ல இகஇகத்துக் கொண்டனர். அமைச்சர் ரங்கதுரை அவர்களைக் கவனித்துக் கொண்டார். டாக்டர் பிரபுவின் ஆராய்ச்சிக் கூடத்தில் என்ன புது ஆராய்ச்சி நடக்கிறது என்பதை இவர்கள் மூலம் மிகச் சுலபமாக அறிந்து கொள்ள முடியும் என்று ரங்கதுரை புரிந்து கொண்டார்.

பிரபு பேசியதைக் குறிப்பெடுத்துக் கொண்ட நீலாவுக்கு பிரபு சொன்ன கடைசி பகுதி ஆர்வத்தைத் தூண்டியது. செங்கோடன் சொன்னது உண்மைதான். பிரபு ஏதோ

முக்கிய ஆராய்ச்சியில் முனைந்திருக்கிறார். அதன் பயன்கள் என்னென்ன என்பதை நீலா கண்டுபிடிக்க வேண்டும்... 'பயன்களா இல்லை பயங்கர விளைவுகளா?' என்று நீலாவால் நினைக்காமலிருக்க முடியவில்லை.

நிகழ்ச்சி ஒருவழியாக முடிந்த போது மணி பத்தை எட்டிக் கொண்டிருந்தது.

டாக்டர் பிரபு, சாந்தி குழந்தைகளுடன் காரை நோக்கி நடந்த போது நீலாவும் பின்தொடர்ந்தாள். அவளருகில் மூர்த்தியும் நடந்தான்.

"டாக்டர் பிரபு!" நீலாவின் குரல் பிரபுவை நிறுத்தியது.

"யெஸ்..."

"டாக்டர் பிரபு... என் பெயர் நீலா. நான் 'சென்னை செய்தி'யில் நிருபராக இருக்கிறேன். முதலில் உங்களுக்கு என் மனமார்ந்த பாராட்டுகள்!" என்றாள் நீலா.

"தேங்க்யூ..." என்று சற்று தயங்கினார் டாக்டர் பிரபு.

"இப்போது உங்களுக்கு நேரமிருக்காது... உங்களுடன் பேச எனக்கு ஒரு வாய்ப்பு வேண்டும். உங்கள் ஆராய்ச்சிக் கூடத்தையும் பார்க்க எனக்கு ஆசை. எப்போது வரலாம் என்று சொல்ல முடியுமா?" நீலா தனக்கே உரிய பாணியில் கச்சிதமாகப் பேசினாள்.

பிரபுவின் தயக்கம் மறைந்தது. தன்னுடைய ஆராய்ச்சியை மக்களுக்கு அறிவிக்க இதைவிட நல்ல தருணம் அமையாது என்று கணக்கிட்டுக் கொண்டார்.

"உங்கள் பத்திரிகைக்குச் செய்தி கொடுக்க நிச்சயம் என்னால் முடியும்... அடுத்த வாரம் ஒருநாள் பார்க்கலாமா... என்னுடைய ஆபீசில் கூப்பிட்டுக் கேட்டால் என்ன தேதி, நேரம் என்று தெரிந்து கொள்ளலாம்... ஓ இவர் யார்? உங்கள் பத்திரிகை போட்டோகிராபரா?" என்று மூர்த்தியைப் பார்த்துக் கேட்டார்.

"என் பெயர் மூர்த்தி... போட்டோகிராபர்தான்!" என்று சிரித்துக் கொண்டே மூர்த்தி சொன்னான்.

பிரபு புறப்பட்டுச் சென்றபின் மூர்த்தியும் நீலாவும் பேசிக் கொண்டே தேனாம்பேட்டை மைதானத்தைக் கடந்து அண்ணா சாலைக்கு வந்தனர்.

"நான் ஆட்டோவில் போய் விடுவேன் மூர்த்தி... நாளைக்கு ஆபீஸில் பார்க்கலாமா?" என்று நீலா விடைபெற முயற்சி செய்தாள்.

"நீலா... நீ ஏதோ என்னிடம் விவரம் சொல்லப் போறேன்னியே... ஏன் அவ்வளவு தாமதமாய் வந்தே..." மூர்த்தி விடுவதாயில்லை.

"நீ அதை மறந்திருப்பேன்னு நினைச்சேன்."

"உனக்குச் சொல்ல விருப்பம் இல்லேன்னா சொல்ல வேணாம்." மூர்த்தி சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

"அப்படியில்லை, மூர்த்தி... இது 'பெர்சனல் மேட்டர்' எப்படி சொல்றதுன்னு தயக்கமாய் இருக்கு." நீலாவின் கண்கள் மெல்லப் பனிக்க ஆரம்பித்தன.

"ஐம் சாரி நீலா... நான் கொஞ்சம் ஓவரா பேசிட்டேன்." மூர்த்தித் தணிவாகப் பேசினான்.

"பரவாயில்லை மூர்த்தி... உன்னை என் உண்மை நண்பன்னு நான் ஏத்துக்கிட்டேன்... உன்கிட்ட சொன்னா மனசுக்கு ஆறுதலா இருக்கும்... இந்த விவரம் என் கணவருக்கும் எனக்கும் இடையே இருக்கும் பூசலைப் பத்தினது..." நீலாவின் குரலில் எங்கேயோ சோகம் தலைகாட்டியது.

மூர்த்தி பதில் சொல்லவில்லை. நீலாவையே பார்த்தான். நீலாவின் குடும்ப வாழ்க்கையில் அமைதி இல்லை என்பதை மூர்த்தியால் நம்ப முடியவில்லை. அவள் எப்போதும் முகம் கோணாமல், ஆர்வத்துடன் வேலை செய்கிறாள்; எல்லோருடனும் சிரித்துப் பேசிப் பழகுகிறாள். அவள் குடும்ப வாழ்க்கையில் ஒரு குறையா?

"நீலா... உன்னுடன் ஆட்டோவில் நான் துணையாக வருகிறேன்... பேசிக் கொண்டே போகலாமே" என்றான் மூர்த்தி.

இந்த நேரத்தில் துணை நல்லது என்று நீலா முடிவு செய்தாள்.

இருவரும் ஆட்டோவில் ஏறியதும் அது அண்ணாசாலையில் மயிலாப்பூர் போகும் திசையில் ஓடியது.

நீலா, மூர்த்தி இருவரும் ஏறிய ஆட்டோ பார்வையிலிருந்து மறைந்ததும் அவர்களைக் கவனித்து வந்த ஓர் ஆள் இருட்டிலிருந்து வெளிச்சத்துக்கு வந்தான்.

'நாளைக்குச் செங்கோடன் சாருக்குச் சொல்லி விடலாம்' என்று முணுமுணுத்துக் கொண்டே அவன் நடந்தான்.

(தொடரும்)




"அதெல்லாம் இங்கே இல்லை சார். கோவாவிலே 'பால் கோவா ஃபேமஸ்'னு நீங்களா நினைச்சுக்கிட்டா எப்படி?"

- குல்லூ

# பாலைவனக் கனவு

குகன்

தூரத்தில் எக்கிச்சி மேடு தெரிந்தது. உதிர்ந்த பழுப்பு இலைகளைப் போல செம்மறி ஆடுகள் படுத்துக் கிடந்தன. மரத்தடியில் அப்பா. அவரிடம் போய் வாளியை நீட்டினேன்.

"நீ ஏம்பா சாப்பாட்டை எடுத்துக்குட்டு வந்த... ஆட்டு கிடையன் வேலப்பனை அனுப்பி எடுத்துக்க மாட்டேனா.....? உனக்கு ஒரு உத்யோகம் கிடைச்சுட்டுன்னா நிம்மதியா கண்ணை மூடிடுவேன்... அந்த வண்ண மடையான் சாமிதான் கண்ணைத் திறக்கணும்...." என்றார்.

ஆடுகள் படுத்து அசை போட்டுக் கொண்டிருந்தன. வாளியை வாங்கிக் கொண்டு திரும்பினேன்.

வழியில் இருஷ்ணன் வந்தான். என்னைப் போலவே படித்துவிட்டு வேலையில்லாமல் இருப்பவன். முகத்தில் இன்று மட்டும் வித்தியாசமான பிரகாசம்!

"அப்பாவுக்குத் தெரிஞ்ச பிரண்ட் ஒருத்தர் டிராவல் ஏஜென்ஸி வச்சிருக்கார். கல்ஃபுக்கு அனுப்பறாராம். அகவுன்டன்ட் வேலை. அப்பா கிட்ட சொல்லிக்கிட்டிருந்தார். அப்பாவும் என்னை அனுப்பறதா இருக்கார். நீயும் வாடா...." சொல்லி முடிப்பதற்குள் அவனுக்கு மூச்சு வாங்கிவிட்டது.

"அட நீ வேற. அவ்வளவு பணத்துக்கு நான் எங்கடா போவேன்?"

"எப்படியாவது தோது பண்ணு. ஒரு வருஷத்துல சேர்த்து சம்பாதிச்சுடலாம். இந்தியாவில நிச்சயமா வேலை கிடைக்கப் போறதில்லை."

"வீட்ல கலந்துக்கிட்டு நாளைக்குச் சொல்றேன்" என்று புறப்பட்டு வந்து விட்டேன்.

"நாப்பது ஆடு சீரா தரேன்னு சொன்னாக. நாம கராறா கேட்டா அம்பது ஆடு தருவாக... இந்தப் பய நாலு எழுத்துப் படிச்சுட்டதால ஆடு மேய்க்க மாட்டேங்குறான். ஆனா அவ ஆட்டை மேய்ப்பா... அண்ணன் பொண்ணு - சொந்தம் விட்டுப் போகாமலும் இருக்கும்...." - அம்மா, அப்பாவிடம் அடி போட்டாள்.

"இன்னும் பிழைப்புக்கே வழியில்லா, அவளைக் கட்டிக்கிட்டு என்ன செய்வேன்?" - எரிச்சலுடன் கத்தினேன்.

தூக்கிக் கட்டிய புடைவையுடன் வளர்த்த காதில் குண்டலம் ஆட, வேப்பெண்ணெய் தடவிய தலையுடன் வந்து பயமுறுத்தினாள், மாமன் மகள் அஞ்சலை. சும்மா விடுவதாக இல்லை. மறுநாள் மாமா சம்பந்தம் பேச வருவதாகச் சொன்னாள். ஒரு முடிவுடன் தூங்கினேன்.

காலை பத்து மணிக்கு மாமா வந்தார். அப்பா, அம்மாவுடன் வழக்கமான குசலம் விசாரித்தல் நடந்தது. என்னைப் பார்த்து "என்ன மாப்ளே சௌகரியமா?" என்றார்.

"நல்லா இருக்கேன்."

"தங்கச்சியும், மச்சானும் ஏதும் சொன்னாங்களா?"

"நான் அஞ்சலையைக் கட்டிக்கிறேன் மாமா...."

அம்மா ஆச்சரியமாகப் பார்த்தாள். அப்பா, அம்மா அதிர்ச்சியுடன் பார்த்தார்கள்.

"ஆனா ஒரு கண்டிஷன் மாமா....."

"என்னவா இருந்தாலும் தயங்காம சொல்லுங்க மாப்ளே."

"சீரா எனக்கு ஆடு வேணாம். அந்தப் பணத்துல என்னை வெளி நாட்டுக்கு அனுப்புங்க. பயணம் போயிட்டு வந்து அஞ்சலையைக் கட்டிக்கிறேன்."

கொஞ்சம் அதிர்ந்தாலும் சுதாரித்துக் கொண்டார். "நல்ல யோசனை தான். ஆனா அம்புட்டு பணத்தையும் என்னால புரட்ட முடியாது மாப்ளே... முடிஞ்ச வரைல நான் தரேன். பாக்கி பணத்துக்கு...."

"முடிஞ்ச வரைல கொடுங்க. பாக்கியை எங்க ஆட்டை வித்து நான் புரட்டிக்கிறேன்."

"என்ன பேசறான் பார்த்தீங்களா. எனக்கு அப்பவே சந்தேகம். ஆரம்பத்துல கட்டிக்கிறேன்னு தெளிவா பேசறானேன்னு பார்த்தா கிறுக்கு புத்தியைக் காட்டிட்டான். ஆட்டை விக்கறானாம்.... இதெல்லாம் எனக்குச் சீராக வந்தது. இத வித்தா நான் உசுரோடு இருக்கமாட்டேன்." அம்மா வானத்துக்கும் பூமிக்கும் குதித்தாள்.

"விடு தங்கச்சி! மாப்ள பயணம் போயிருக்காகன்னு சொன்னா நமக்குப் பெருமைதானே தங்கச்சி. படிச்ச புள்ளைக்கு வெளிநாட்டுல நல்ல சம்

பணம். ஒரு தடவை பயணம் போயிட்டு வந்துட்டுன்னா நாம எல்லாரும் இந்தத் தொழிலையே விட்டுடலாம்... அவ்வளவு வருமானம் கிடைக்கும்."

"எனக்கும் மச்சான் சொல்றதுதான் சரியாப் படுது. நம்ம புள்ளையை ஆட்டை வித்து அனுப்பிடுவோம்... புள்ள சம்பாதிச்ச பிறகு ஆடு வாங்கிக்கலாம்" என்றார் அப்பா. அம்மா அப்புறம் ஒன்றும் பேசவில்லை.

பதினைந்து நாளில் விசா, டிக்கெட் ரெடியாகி பயணத் தேதி கன்ஃபார்ம் ஆகிவிட்டது. வீட்டில் எல்லோரிடமும் விடை பெற்று அழுது, ஆறுதல் கூறிவிட்டு கிருஷ்ணனுடன் புறப்பட்டேன். எதிர் காலக் கனவுகளில் மிதந்தபடியே விமானம் ஏறினோம்.

தரையிறங்கிய போது, விமான நிலையத்தில் எங்கள் பெயர்கள் எழுதிய அட்டையுடன் ஒருவன் நின்றான். தாடி வைத்திருந்தான். முப்பது வயதிருக்கும். அவனருகில் சென்று எங்களை அறிமுகப்படுத்திக் கொண்டோம்.

வரவேற்று அழைத்துப் போனான்.

ஒரு மணி நேரப் பயணத்திற்குப் பிறகு, கார் ஒரு பெரிய பங்களா முன் நின்றது. அழைத்துப் போய் உட்கார வைத்தான். விசா, மற்றும் டாக்குமென்ட்களை வாங்கிக் கொண்டு உள்ளே போனான்.

திரும்பி வந்தவன், நீங்க ரெண்டு பேரும் இந்த ரூம்ல தங்கிக்குங்க என ஒரு ரூமைச் சுட்டிக் காட்டினான்.

"தேங்க்யு சார்... நாங்க வேலை பாக்க வேண்டிய ஆபீஸ் எங்க இருக்கு?" என இழுத்தான் கிருஷ்ணன்.

"ஆபீசா?" கட கடவெனச் சிரித்தான். அவன் சிரித்த சிரிப்பில் கட்டடமே ஆடிவிடுமோ என்ற சந்தேகம் வந்தது. "லுக் மிஸ்டர். உங்க ஏஜென்ட்டுக்கெல்லாம் கமிஷன் கொடுத்து செட்டில் பண்ணிட்டோம். இனிமே ஒன்னும் செய்ய முடியாது." சற்று நிறுத்தி விட்டுத் தொடர்ந்தான்.

அவன் சொல்லப் போவது என்னவென்று கேட்கவே பயமாக இருந்தது. "நாங்க ஒட்டகம் மேய்க்கத்தான் ஆள் கேட்டிருந்தோம். நாளைக்கு ஜீப் வந்து ஒட்டகம் மேய்க்கற இடத்துக்கு அழைச்சுட்டுப் போகும். ஒட்டகத்தை மேய்ச்சுக்கிட்டு மரியாதையா இருங்க...." என்றான் கேஷுவலாக.



**பறக்கும் தட்டு சினிமா பார்த்தால் பிரமிப்பில் மூழ்கி, 'சூப்பர்', 'தூள்' என்று கமெண்ட் கொடுத்து, வந்து விடுவோம். ஆனால், பிரிட்டனில் இது மாதிரி அடையாளம் தெரியாத பறக்கும் வஸ்து, வேற்று கிரகவாசிகள் பற்றியெல்லாம் ஆராய்ச்சி செய்கிறார்கள். British Unidentified flying object Research Association (BUFO) என்கிற அவ்வமைப்பு, தன் ஆராய்ச்சி முடிவுகளை ஒரு என்ஸைக்ளோபீடியாவாகத் தொகுத்திருக்கிறது!**



• 1960-ல் பார்த்த பறக்கும் தட்டு...

# அடையாளம்

புருனோஃபாசினி என்கிற இத்தாலியர் ஒருநாள் தம் வீட்டு ஜன்னலுக்கு வெளியே 200 கெஜம் தூரத்தில் ஒரு சின்ன ஒளிப் புள்ளியைக் கண்டார். அது புயலும் இடியும் மழையுமான காலமாதலால் அந்த ஒளிப் புள்ளியை முதலில் அவர் மின்னல் என்று கருதிக் கொண்டார்!

ஆனால் மின்னல் என்ன டியூப் லைட்டா? அணையாமல் ஒரே இடத்தில் நின்று ஒளிர?

சந்தேகம் வர, நண்பர் வீட்டை விட்டு வெளியே வந்து கிட்டே போய்ப் பார்த்திருக்கிறார்.

அது ஒரு விண்கலம்! அமெரிக்க, ருஷ்யக் கலம் மாதிரி இல்லை அதன் தோற்றம்... வேறு மாதிரி. போதாக்குறைக்கு உள்ளே சில அடையாளம் காண முடியாத, முகம், உடல், தலை மறைந்த மனிதர்கள்... அல்ல... உருவங்கள்! அவர்கள் நடவடிக்கைகளிலிருந்து, கலம் ஏதோ ரிப்பேர் ஆகி விட்டதென்றும், சரி பார்க்க முயல்கிறார்கள் என்றும் உணர்ந்த ஃபாசினி, கிட்டே போய், "ஏதாவது உதவி?" என்று கேட்டிருக்கிறார்.

அவ்வளவுதான்! ஒரே தள்ளு! சில கெஜங்கள் தள்ளிப் போய் விழுந்த ஃபாசினி, மறுபடி கண் விழித்த போது கலமும் இல்லை; அந்த மர்ம மனிதர்களையும் காணோம்! ஆனால் அந்தக் கலம் இறங்கிய தன் அடையாளம் மட்டும் பெரிதாக, வட்டமாக, புல் தரையில்!

இத்தாலியையே கலக்கிய இச்சம்பவம் நடந்தது 1950ல்.

இன்னொரு நிகழ்ச்சி இங்கிலாந்தில் நடந்தது. ஒருநாள் அதிகாலை பிலிப் மோலவா என்கிற சிறுவன், தோட்டத்தில் தன் செல்ல முயல் குட்டியோடு விளையாடிக் கொண்டிருக்க, திடீரென்று ஒரு சின்ன தட்டு மாதிரியான பொருள் அங்கே, மெல்லிய சப்தத்துடன் பறந்து போவதைக் கண்டான்! அவனருகே அந்தத் தட்டு பறந்து வருகையில், சொல்ல முடியாத உடல் உபாதை ஏற்பட, வாந்தி எடுத்து மயங்கி விட்டான் பிலிப். தொடர்ந்து மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட பிலிப்புக்கு நிற்காத வாந்தி. தவிர பக்கவாதம் வேறு கண்டுவிட்டது!

மருத்துவர்கள் உணவிலே ஏதோ கோளாறு என்று சொல்லி விட்டாலும் தான் காண நேர்ந்த பறக்கும் தட்டுக்கும் இதற்கும் சம்பந்தமிருப்பதாகவே கருதினான் பிலிப்!

"என்ன பார்த்தாய் அந்தத் தட்டில்?" என்றால், "தட்டைத் தவிர வேறெதுவும் பார்க்கவில்லை" என்பதுதான் அவன் பதிலாக இருந்தது!

இதெல்லாவற்றையும் தூக்கிச் சாப்பிட்டு ஏப்பம் விடும் சம்பவம் 1972-ல் ஆஸ்திரேலியாவில் நடந்திருக்கிறது! மூச்சைப் பிடித்துக் கொண்டு படியுங்கள். 'மரீன்' என் கிற பெண்மணி, தன் காரை, தானே ஓட்டிக் கொண்டு சென்று கொண்டிருந்த போது திடீரென்று தன் முன்னே

# தெரியாத ஆச்சரியங்கள்!

சாலையில் ஒரு மிக பிரம்மாண்டமான நீல ஒளி வட்டம் எழுந்து நிற்பதைக் கண்டிருக்கிறாள்! பயந்து போய்த் திரும்பிப் பார்க்க, பின்னாலும் அதே ஒளிக் கோளம்! அந்தக் கோளத்திலிருந்து சன்னமான ஒலி வேறு!

அம்மணி பயந்து போய் காரை அதிவேகத்தில் கிளப்பிப் போய் விட்டார்!

ஆனால் சில நாட்கள் இடைவெளியில் மீண்டும் அதே வழியில் காரில் செல்லும் போது, மீண்டும் அதே இடத்தில் மீண்டும் அதே ஒளிக்கோளம்!

இம்முறை கார் ஒத்துழைக்க மறுத்து நின்று விட, 'மரீன்', அந்த ஒளிக்கோளத்தை உற்றுப் பார்க்க, அது ஒரு வேற்று கிரகக் கலம் என்பது புரிந்தது.

பீதி! பயம்! என்ன செய்வது?

சட்டென்று அந்த ஒளிக்கோளத்திலிருந்து ஒரு குரல் :

"You now have control!"

கார் கிளம்பி விட்டது!

அந்தப் பெண்மணி அதிர்ந்து போய் விட்டார். (சுற்றுப்புற மக்களும் அந்தக் கலத்தைப் பார்த்திருக்கிறார்கள்.) நேரே UFO ஆராய்ச்சியாளர்களிடம் போய்த் தகவல் சொல்ல,

அதற்குள் 'மரீனு'க்கு ஒரு தகவல் வருகிறது...

யாரிடமிருந்து?

அந்த அநாமதேய விண்கலவாசிகளிடமிருந்து!

"மறுபடி வா."

கதை மாதிரி இருக்கும் இச்சம்பவத்தின் கிளைமாக்ஸ் என்ன தெரியுமா?

மரீன், ஆராய்ச்சியாளர்கள் துணையுடன் மீண்டும் அவ்விடம் செல்ல, விண்கலவாசிகளால் காரிலிருந்து அவர் கடத்தப்பட்டார்!

எப்படி?

'ஒளிவட்டம் வந்து மேலே கவிந்து தூக்கிப் போய் விட்டது!' என்றால் நம்ப மாட்டீர்கள்!

ஆனால் இது நடந்த ஆச்சர்யம்!

வேற்றுலகக் கலத்துக்குள் சென்று திரும்பி வந்த மரீனிடம் "என்ன பார்த்தீர்கள், உள்ளே?" என்று ஆராய்ச்சியாளர்கள் கேட்ட போது,

"உள்ளே காளான்கள் மாதிரியான பிசின் படலம் நகர்ந்து கொண்டிருக்கிறது... வேறொன்றும் தெரியவில்லை" என்று அதிர்ந்து சொல்லியிருக்கிறார்!

அம்மணிக்குக் கிடைத்த 'பாக்கியம்'(?) ஆராய்ச்சியாளர்கள் யாருக்கும் இதுவரை கிடைத்ததாகத் தெரியவில்லை!

— கிச்சா

நன்றி : **UFO Encyclopedia**

# எல்லாமே என் ராசாதான்



ஒரு சப்ஜெக்டை ஆணிவேர் வரைக்கும் அலசிப் பார்ப்பது என்பது தமிழ் கமர்ஷியல் சினிமாக்களைப் பொறுத்தவரை கெட்ட வார்த்தை.

இங்கே அதை உடைத்துப் பாராட்டு பெறுபவர் ராஜ்கிரண். தம் வழக்கப்படியே, கிராமிய, குடும்பச் சூழலைத்தான் இந்தப் படத்துக்கும் களனாக்கியிருக்கிறார்.

சொத்து இருக்கிற தைரியத்தில் வேலைக்குப் போக வேண்டிய அவசியமில்லாமல், குளத்தங்கரை சீட்டுக் கச்சேரியின் ராஜாவாக இருக்கிறார். ஒவ்வொன்றாகத் தோற்பதும், ஏழைமை எட்டிப் பார்ப்பதும், கைப்பிடித்தவள் கண்கலங்குவதும், அது பார்த்து ஹீரோ உருகுவதும், தன் செயல் எண்ணி வருந்துவதும் மிக இயல்பாக வருகிறது. சீட்டாட்ட வெறியர்கள் திருந்தாவிட்டாலும் ஒருகணம் நின்று யோசிக்கவாவது செய்வார்கள்.

இனி திருந்தி விடுவதாக கோவிலில் சத்தியமெல்லாம் செய்து விட்டபின், தொழில் தொடங்க தாலி விற்ற காசிலும் ஆடிப் பார்த்துவிட வருகிற சபலம், வெறியாகி கடைசி பைசா வரை தீர்த்து விடுகிற இடம் திக்.

அதையும் தாண்டி, குழந்தைக்கு வாங்கின பால் டப்பாவை வைத்து ஆடுகிற கட்டம் யாரையும் உலுக்கும்.

இயல்பாகவே ரா.கிக்கு அமைந்து விட்ட இறுகின முகமும் சிவந்த விழிகளும், கட்டைத் தேகமும் இந்தப் படத்துக்கு ரொம்ப சாதகமாகி இருப்பதைக் குறிப்பிட வேண்டும்.

வில்லன் - ஹீரோ என்று தனி நபர்கள் இருந்தாலும் சந்தர்ப்பங்களையும் சம்பவங்களையுமே வில்லனாகவும் ஹீரோவாகவும் சித்திரித்திருப்பது ஜோர். (முகத்தை அஷ்டகோணலாக்கிக் கொள்ளும் அந்த சோப்ளாங்கி வில்லன் தேவையா டைரக்டர்?)

படத்தின் பெரிய பலம் இளையராஜா. ரொம்ப நாளைக்கப்புறம் விஸ்வரூப தரிசனம். பாடல்களைப் போலவே மிக இயல்பான, அலட்டலில்லாத ரீ-ரெக்கார்டிங்.

எஃபெக்ட் என்கிற பெயரில் குலைநடுங்க வைக்கிற சங்கதி ஏதும் இல்லாமல், சண்டைக் காட்சிக்குக் கூட வெகு இயல்பான இசை.

திடுக்கிடும் திருப்பங்களால் கலங்க அடிக்காமல் நேரான சம்பவக் கோவைகளால் படம் பண்ணியிருக்கிறார்கள். ஆபாசக் காமெடி, குலுக்கல் நடனம், அருவருப்பு விஷயங்கள் ஏதுமில்லாமல் இப்படி ஒரு தமிழ்ப் படம் பார்த்து ரொம்ப நாளாகிப் போச்சு!

—ஆர்.பி.ஆர்.

# திகில் கனவுகள்!






நேற்று ஒரு பயங்கரக் கனவு மிஸ்டர் தேவாரம்! போலீஸ் தொப்பி தயாரிப்பு வாரியம்னு ஒண்ணு உருவாக்கி அதுக்குத் தலைவரா அம்மா என்னை அனுப்பிட்டாங்க!
அதுவாச்சு எவ்வளவோ தேவலாமே! என் கனவுல தினம் தினம் வீரப்பன் என்னைத் துரத்துறான், நான் ஓடி ஓடி அலையறேன்!
வைரமுத்து சார்! நான் கண்ட கனவு உங்களுக்கு ரொம்ப கடுப்பா இருக்கும். நானும் ரஜினியும் சேர்ந்து ஒரு படத்துக்கு வொர்க் பண்றோம்!
அந்தப் படம் படையப்பா ஆனதுனா நான் கண்ட கனவு உங்களுக்கு பரவாயில்லா இருக்குமே!
பேராசிரியரே! புதுக்கோட்டை இடைத்தேர்தல் நடக்குது; நாம ஜெயிச்சிடறோம்! இதுவே பொதுத் தேர்தல் வெற்றிக்கு அச்சாரம்னு நான் பேசறேன்! எப்படி என் கனவு?
பிரமாதம்தான் போங்க! ஆனா முதல்வர் பதவிக்கு மு.க. ஸ்டாலின் என்னை முந்திக்கிறதா நான் கண்ட கனவுதான் கலக்குது!
சசி! நேத்து ஒரு பயங்கரக் கனவு! சு.சுவாமி முதல்வராயிட்டாரு!
ஐயய்யோ அதைவிட பயங்கரம் என் கனவு! முதல்வர் சு.சுவாமிக்கு என் கணவர் அந்தரங்கத் தோழராயிட்டாரு!

# நினைவலைகள்

**41**

**MUSIC IS THE UNIVERSAL LANGUAGE OF MANKIND - LONG FELLOW**

ஒரு திரைப்படத்திற்கு இசை முக்கியமா? பாடல்கள் அவசியமா? என்று கேட்பவர்கள் உண்டு.

சில சமயங்களில் அறிவு ஜீவிகளில் சிலர் "பாட்டே இல்லாமல் நீங்கள் படம் எடுத்தால் என்ன?" என்று என்னிடம் கேட்டதுண்டு.

திரைப்படங்களில் இசையும் பாடலும் இருக்கக் கூடாது என்று ஏன் இவ்வளவு பிடிவாதமாக அவர்கள் தலையைப் பிய்த்துக் கொள்கிறார்கள் என்று எனக்குப் புரிவதில்லை.

இசை என்பது இந்தியப் பண்பாட்டிலும் கலாசாரத்திலும் அன்றாட வாழ்க்கையிலும் இரண்டறக் கலந்து விட்ட ஒரு அம்சம். மற்ற நாடுகளில், வாழ்க்கை முறையோடு இசை இந்த அளவுக்கு ஒன்றிப் போயிருக்குமா என்பது சந்தேகம் தான்.

கிராமங்களில் நாற்று நடும் போது கிராமியப் பாடலைப் பாடிக் கொண்டேதான் வேலை செய்கிறார்கள். ஏற்றம் இறைப்பதற்கென்று தனி பாடல்கள் இருக்கின்றன.

தெம்மாங்குப் பாடல்களும் தாலாட்டுப் பாடல்களும் இந்தியப் பண்பாட்டு வாழ்க்கை முறையல்லவா?

பாடல்களால் யதார்த்தம் (Realism) அடிபட்டுப் போகிறதேயென்று அங்கலாய்த்துக் கொள்கின்ற ஆர்ட் ஃபிலிம் விமர்சகர்களுக்கெல்லாம் நான் சொல்வதுண்டு :

"வெறும் 'ரியலிஸம்' என்கிற போர்வையிலே படம் எடுப்பதை நான் விரும்பவில்லை. இந்த மீடியத்தினுடைய முக்கியமான குறிக்கோளே communicationதான். எடுத்துக் கொண்ட விஷயத்தை எத்தனை பேருக்குப் புரிய வைக்கிறோம் அல்லது புரியும்படி சொல்கிறோம் என்பதுதான் சினிமா மீடியத்தின் முக்கியமான பங்கு. Absolute realism பெருவாரியான மக்களுக்குப் போய்ச் சேருவதில்லை. கவர்ச்சியற்ற சில வறண்ட உண்மைகளையும் rawவான கருத்துக்களையும் திரைப்படங்களிலே தோலுரித்துக் காட்டப்பட வேண்டுமென்கிற கட்டாயம் ஏற்படும் போது இப்படிப்பட்ட 10 அல்லது 20 சதவிகித அணிகலன்களும், சர்க்கரை தோய்ந்த மேல்பூச்சு ஒப்பனைகளும் அத்யாவசியமாகிறது."

பராசக்தி படம் வந்த காலத்தில் அந்த சமூகப் படத்தில் வசனங்கள் பேசிய மாதிரியாகவா நிஜ வாழ்க்கையில் அன்று மக்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்? மக்களைக் கவர்ந்து இழுத்த அந்த அறிவார்த்தமான வசன நடையைத்தான் 10 சதவிகித கற்பனை அணிகலன் என்று நான் கருதுகிறேன். ஏன்? அந்த அடுக்கு மொழி வசனங்களில் அடிப்படையாகக் காதுகளுக்குத் தொனித்தது கூட ஒருவித நயமான தாளமும் இசையும்தான்.

சாதாரண மக்கள் பேசுவதிலிருந்து வித்தியாசமாகப் பேசியதுதான் அந்தப் படத்தின் இமாலய வெற்றிக்கு ஒரு முக்கிய காரணம்.

இன்றைக்கு வெளிவந்து அகில இந்தியாவிலும் வெற்றிகரமான ஓடிக் கொண்டிருக்கும் மணிரத்தினம் அவர்களின் 'பம்பாய்' படம் கூட இந்த அடிப்படைத் தத்துவத்தைத்தான் உணர்த்துகிறது. இந்து-முஸ்லீம் நல்லிணக்கத்தை அடிப்படையாகக் கொண்டு புனையப்பட்ட இந்தக் காதல் கதைக்கு அந்தத் திரைப்படத்தின் இசை எந்த அளவிற்கு படத்தின் ஜனரஞ்சக ஈர்ப்புக்கும் பொருளாதார வெற்றிக்கும் அடிகோலியிருக்கிறது என்று நாம் நினைத்துப் பார்க்க வேண்டும்.

அகில இந்தியாவிலேயும் இந்த 'பம்பாய்' படம் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தியிருக்கிறது என்றால் காதல், இசை, ஃபோட்டோகிராஃபி, லொகேஷன்கள், போன்ற அணிகலன்களுடன் ஒரு அற்புதக் கலவையாக, வெகு சாமர்த்தியமாக இயக்குநர், திரைக்கதை அமைத்திருப்பது தான். இப்படிப்பட்ட அணிகலன்கள் இல்லாமல், வெறும் தேசிய விருதை மட்டுமே மனத்தில் கொண்டு இந்தத் திரைப் படம் படமாக்கப்பட்டிருந்தால் அதன் தலையெழுத்து என்னவாகியிருக்கும் என்று எண்ணிப் பாருங்கள். சில முக்கிய பெருநகரங்களில் ஒரு தியேட்டரில் காலைக் காட்சியாக மட்டுமே நின்று போயிருக்கும். இன்றைக்கு இந்தத் திரைப் படத்தைப் பார்க்கும் மக்களின் எண்ணிக்கையில் நூற்றுக்கு

ஐந்து சதவிகித மக்களுக்குத்தான் அது சென்றடைந்திருக்கும்.



**ப**ல மாதங்களுக்கு முன்பு ஒரு டீவியில் ஒளிபரப்பப்பட்ட ஒரு நிகழ்ச்சியை ஐந்து நிமிடம் பார்க்கக்கூடிய ஒரு வாய்ப்புக் கிட்டியது. எனது கவிதாலயா நிறுவனம் தயாரித்து உலகமே போற்றிக் கொண்டிருந்த மணிரத்தினத்தின் 'ரோஜா' திரைப்படம் பற்றி அதிலே ஒரு கருத்து கூறப்பட்டது. ஒரு கதாசிரியரிடம் பேட்டி காண்கிற போது கேள்வி உருவில் வந்த அந்த irresponsible statement என்னை மிகவும் தாக்கத்திற்குள்ளாக்கியது. உடனேயே அந்த நிகழ்ச்சியாளருக்கு ஒரு கடிதம் எழுதத் தூண்டியது.

அந்தக் கடிதத்திலிருந்து சில பகுதிகள் :

" 'காஷ்மீரின் அடிப்படைப் பிரச்னைக்கு ஆழமாகப் போகாமல்' என்று நீங்கள் குறைபட்டுக் கொண்டீர்கள். The whole thrust of the film Roja was not on how to tackle the 'Kashmir Issue' which is not our cup of tea and definitely not a film maker's job. அது ஆட்சியாளர்களுடைய கடமை; அரசியல்வாதிகளின் கடமை; இல்லையென்றால் உங்களைப் போன்ற 'intellectuals' தீர்க்க வேண்டிய ஒரு பிரச்னை.

ஒரு கதையை எடுத்துக் கையாளும் போது அதற்கு ஆயிரமாயிரம் கோணங்கள் உண்டு; ஆயிரமாயிரம் வடிவங்கள் உண்டு; அதிலும் பொழுதுபோக்குச் சாதனமான சினிமா என்கிற மீடியத்திற்குக் கதை எழுதும் போதோ திரைக்கதையமைக்கும் போதோ popular point of view என்பது மிக மிக முக்கியம்.

எப்படிப்பட்ட கதையைத் திரைக் கதைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென்பதோ, எந்தக் கோணத்தில் அதற்கு திரைக்கதையமைக்க வேண்டுமென்பதோ, திரைக்கதை ஆசிரியரும், இயக்குநரும் சேர்ந்து முடிவு செய்து கொள்ள வேண்டிய விஷயம். Absolutely their prerogative.

சரி அய்யா! நாங்கள் எல்லாம் வியாபாரிகள். காஷ்மீர் பிரச்னையின் அடிப்படைக் காரணங்களை எடுத்துக் கொண்டு அக்குவேறாக, ஆணிவேறாக உங்கள் மேற்பார்வையில் ஒரு documentary தயாரித்து எங்களுக்கெல்லாம் அறிவு புகட்டலாமே!

காஷ்மீரத்துக்குச் சென்றவள் பாட்டுப் பாடுகிறாளே என்று அங்கலாய்த்துக் கொண்டீர்களே? ஒருநாள் சினிமா பாட்டு இல்லாமல் உங்கள் டீவியை நடத்திப் பாருங்களேன்!

தினம் ஒரு சினிமா, சினிமா க்விஸ், சினிமா நேரம், சினிமா பாட்டுக்கள், பழம் பாட்டுக்கள், புது பாட்டுக்கள், சினிமாக் கலைஞர்களின் பேட்டி... என்று சினிமாவையே முழுக்க, முழுக்க உங்கள் வியாபாரத்திற்குப் பயன்படுத்துகிற நீங்கள் 'காஷ்மீர் பிரச்னை' பற்றி ஒரு feature film எடுப்பது தானே!

இந்த ரோஜா படம் எடுக்கத் துணிந்த தமிழகத்து தயாரிப்பாளரை இன்று அகில இந்தியாவும் பாராட்டியிருக்கிறது. இந்தப் படம் இதுவரை பெற்றிருக்கும் பரிசுகளையும் விருதுகளையும் உங்களுக்குப் பட்டியல் போட்டு அனுப்பவா?.....

ஒரு திரைப்படத்தின் தரத்தை எடை போட உங்களது அளவுகோல்தான் என்ன? ரோஜாவில் violence இருந்ததா? vulgarity இருந்ததா? இரட்டை அர்த்தம் இருந்ததா? திணிக்கப்பட்ட sex இருந்ததா? crudity இருந்ததா?

மாறாக கலையம்சம் நிறைந்திருந்தது. contemporary கதையம்சம் இருந்தது. நிஜத்தன்மை இருந்தது.

இது ஒரு angry outburst of a genuine film maker என்று நீங்கள் கருதவில்லையென்றாலும் angry outburst of an old man என்று எடுத்துக் கொள்ளுங்கள் பரவாயில்லை."

**இ**ன்று வரை எனது இந்தக் கடிதத்திற்கு எந்தவிதமான பதிலும் இல்லை. நான் கோபப்பட்டதிலும் உண்மையிருக்கிறதென்பதால் தான் இந்த 'மௌனம்'

## கே. பாலசந்தர்

கடைப்பிடிக்கப்பட்டிருக்கிறது என்று என்னையே நான் சமாதானம் பண்ணிக் கொள்கிறேன்.

செவிக்குணவில்லாத போது சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும் என்பது போல, சமுதாயச் சிந்தனைகளுக்கு விதையிட்டு உணவிடும் போது சிறிது செவிக்கும் அவ்வப்பொழுது ஈயப்படும் என்பதுதான் திரை இசையின் தத்துவம் என்று புரிய வருகிறது.

Michelangelo Antonioni சொன்னார் :

"திரைப்படங்களில் இசைக்கு ஒரு முக்கியமான பங்கு இருக்கிறது. எந்தக் கலை வடிவத்தையும் திரைக் கலை பயன்படுத்திக் கொள்வதில் என்ன தவறு இருக்க முடியும்? நாட்டியக் கலை, ஓவியம், இசை, நாடகம், இயல், சிற்பம் எந்தக் கலை வடிவமாக இருந்தாலும் சரி!

காட்சிக்கும் இசைக்குமிடையே உண்டாக்கப்படுகிற நல்லிணக்கத்தைக் காட்டிலும் இசைக்கும் பார்வையாளர்களுக்குமிடையே ஒரு தொடர்பை, நல்லிணக்கத்தை ஏற்படுத்தித் தருவதுதான் திரை இசையின் பணி."

இதற்கு நேர்மாறான கருத்தை ROBERT BRESSON என்கிற இயக்குநர் சொல்லியிருக்கிறார் :

"Directors flood a film with music. கண்ணாலே பார்க்கிற படிவங்களிலும் வடிவங்களிலும் உள்ள தனித்துவத்தைப் பார்க்க விடாமல் தடுப்பதுதான் திரையில் திணிக்கப்படுகின்ற அதீதமான இசை."

நான் சொல்வது இதுதான் :

"இசையென்பது ஆறாவது புலன்; அதன் அனுசரணையான உதவி இல்லையென்றால் ஐம்புலன்களையும் நம்மால் சரியாக உபயோகித்துக் கொள்ள முடியாது."

திரைப்படங்களில் எந்தப் பாடல் எந்த நேரத்தில் எப்படி 'ஹிட்' ஆகும் என்பதை யாராலும் முன்பே கணித்துச் சொல்ல முடிவதில்லை.

'ஏக் துஜே கே லியே' படத்தில் இடம் பெறும் 'தேரே மேரே பீச் மே' பாடலுக்கான ட்யூனை நான் 'ஓகே' செய்து பம்பாயில் பதிவு பண்ணி சென்னை வந்து எனது யூனிட்டைச் சேர்ந்தவர்களுக்குப் போட்டுக் காட்டினேன். அத்தனை பேரும் ஒட்டு மொத்தமாக தெலுங்கு 'மரோசரித்ரா' பாடலுடன் அந்தப் பாடலை ஒப்பிட்டு 'இது வெறும் குப்பை' என்று அந்தப் பாடலுக்குப் பட்டம் சூட்டினார்கள்.

சத்தியமாக இந்தப் பாடல் 'ஹிட்'டாகாது என்று ஒட்டுப் போட்டவர்களின் பட்டியலில் கமலும் அடக்கம். ஆனால் அந்தப் பாடல் 'ஹிட்'டாகி பத்தாண்டு கால சினிமா வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் துவங்கியது.

இன்னொரு உதாரணம் :

இசையமைப்பாளர் மரகதமணி அவர்களை தமிழுக்கு நான் அறிமுகப்படுத்தியது எனது 'வானமே எல்லை' திரைப்படத்திற்காக. ஆனால் அவர் இசையமைத்த எனது 'அழகன்' திரைப்படம், 'வானமே எல்லை'க்கு முன்பாகவே வெளிவந்து விட்டது.

இசை 'கம்போசிங்' நடந்த போது மரகதமணி தெலுங்குக் கம்பெனிக்கு அவர் போட்டிருந்த ஒரு ட்யூனை எனக்குப் போட்டுக் காட்டினார். இது ரொம்பவும் slowவாக இருக்கிறதென்று இந்த ட்யூன் தெலுங்கு கம்பெனியினால் நிராகரிக்கப்பட்டிருந்தது. ஆனால் எனக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. அந்த ட்யூனுக்கு எழுதப்பட்ட பாடல் :

*மழையும் நீயே; வெயிலும் நீயே!*
*நிலவும் நீயே; நெருப்பும் நீயே!*
*அடாடா! உனைத்தான்*
*இங்கு வாழும் மானிடர்*
*காதல் என்பதா?*

மரகதமணி அவர்கள் அந்த ஆண்டின் சிறந்த இசையமைப்பாளராக தமிழக அரசின் விருது பெறுவதற்குக் காரணமாக இருந்தது இந்தப் பாடல்.

பாடலை இனம் பிரிப்பது உள்ளுணர்வு ஒன்றுதான். உள்ளுணர்வு என்பது சங்கீதப் புலமையால் உண்டாவதில்லை; அதற்குத் தேவை சின்ன ஜட்ஜ்மெண்ட்தான்.

(தொடரும்)

## அடுத்த இதழில்...

- **மரண தண்டனை : மாறி வரும் பார்வை!**
  — ஓர் அலசல்
- **அடுத்த நூற்றாண்டில் அட்மிஷன்!**
  — கிச்சு கிச்சு மூட்டும் எச்சரிக்கை!

# பணம் பண்ண வாங்க!

வி. கோபாலன்



இன்றைக்கு மூலைக்கு மூலை 'டைம் ஷேர் ப்ராபர்டீஸ்' என்று விளம்பரம் செய்யப்படுவதைப் பார்க்கிறோம். அதாவது ஒரு குறிப்பிட்ட தொகையை டைம் ஷேர் நிறுவனத்துக்குச் செலுத்தினால் ஒவ்வொரு வருடமும் சில நாட்களுக்கு ஊட்டி, கொடைக்கானல், சிம்லா போன்ற ஏதோ ஒரு சுற்றுலாத் தலத்தில் நாம் தங்கிக் கொள்ளலாம்.... இந்தத் திட்டத்துக்கு முன்னோடி திருப்பதி வேங்கடாசலபதிதான்! திருமலை திருப்பதி தேவஸ்தானம், முதன் முதலில் தங்கும் விடுதிகளைக் கட்டிய போது பக்தர்களிடம் இதே மாதிரி திட்டத்தைச் சொல்லித்தான் பணம் சேகரித்தது: ஒரு காட்டேஜுக்கான செலவில் பாதியை ஏற்றுக் கொண்டால் வருடத்தில் ஒரு சில நாட்கள் அதில் கட்டணம் இன்றித் தங்க உரிமை உண்டு.

டைம் ஷேர் திட்டத்தில் பணம் போட்டு, விடுமுறை விடுதியில் தங்கும் உரிமை பெறுவது போல் வேறு பல 'ஷேர்' திட்டங்களும் புதிதாகக் கிளம்பியுள்ளன. அவற்றுள் ரொம்ப பரபரப்பாகப் பேசப்பட்டது தேக்கு மரத் தோட்டத் திட்டம். சமீபத்தில் மாட்டுப் பண்ணைகளில் பங்கு ஏற்கச் சொல்லியும் காய்கறிப் பண்ணைகளில் காசு போடச் சொல்லியும், ஏன் நெற்பயிர் சாகுபடியில் முதலீடு செய்யச் சொல்லியும் கூட விளம்பரங்கள் வருகின்றன. இந்த முதலீடுகளுக்கு வட்டி தருவதற்குப் பதிலாக பால், காய்கறி, அரிசி என்று பண்டங்களாகத் தருகிறார்கள். அந்த பண்டங்கள் வீடு தேடி வரும் என்று சொல்கிறார்கள். பண்டத்துக்குப் பதில் பணமாகவும் பெற்றுக் கொள்ளலாம்.

இத்தகைய திட்டங்களில் முதலீடு செய்யலாமா? யோசித்து, தேவைக்கேற்ப முடிவு செய்து கொள்ளுங்கள்.

'டைம் ஷேர்' திட்டத்தை எடுத்துக் கொள்வோம். கட்டுப்படியாகிற விதத்தில் தவணை முறையில் பணம் செலுத்த முடிகிறது. இரண்டு வருடங்களில் தவணைகள் முடிந்தபின் விடுமுறைக்குப் போகிறோம். தங்கும் இடம்தான் இலவசமே யொழிய உணவோ, ரயில் பஸ் டிக்கெட்டோ, ஊர் சுற்றிப் பார்க்கும் செலவோ உபரிதான். மலைவாசஸ்தலங்களில் இந்த செலவுகளெல்லாமே சராசரியை விட இரண்டு மடங்கு அதிகமாகத்தான் இருக்கும். நமது சக்திக்கு - அதாவது பர்ஸின் சக்திக்கு - அது கட்டி வருமா என்று யோசிக்க வேண்டும்.

தேக்கு....? அந்த மரத்தைப் பயிரிட்டு வளர்ப்பது சுலபமாயிருந்தால் தேக்கு இன்று மலிவாகவும் சுலபமாகவும் கிடைக்கும் பொருளாக இருக்குமல்லவா? ஆனால் இப்போது வீடு கட்டும் அனைவருமே அலுமினிய ஃப்ரேம்களைத்தான் ஜன்னல்களுக்கும் கதவுகளுக்கும் பொருத்துகிறார்கள்! 'சீப் அண்ட் பெஸ்ட்' என்கிறார்கள். 'வேஸ்ட்' ஆகும் மரத்தூளில் ரசாயனக் கலவையேற்றி particle boards என்ற பலகைகள் செய்து மரப் பலகைகளுக்குப் பதில் உபயோகிக்கிறார்கள். தவிர, தேக்கு மரங்களை இந்தியா போன்ற கடும் வெயில் உள்ள நாடுகளில் பயிரிட்டு வளர்ப்பது அவ்வளவு எளிதல்ல என்று நாளிதழ்களில் சில விவசாயக் கட்டுரைகள் கூட வந்திருக்கின்றன.

இதனால் எல்லா தேக்குமர வளர்ப்புத் திட்டங்களுமே பயனற்றவை என்று ஒதுக்கிவிடச் சொல்லவில்லை. ரொம்ப யோசனைக்கும் ஆராய்ச்சிக்கும் பிறகே இவற்றில் முதலீடு செய்ய முடிவெடுக்கலாம்.

மாட்டுப் பண்ணைகளில் முதலீடு செய்தால் முதலீட்டாளருக்கு ஒரு எண் கொடுத்துவிட்டு அவர் சார்பில் வாங்கப்படும் எருமை மாட்டுக்கும் அந்த எண்ணைத் தருவார்களாம். கூட்டு லாபத்தில் பங்கு தருகிறார்கள். சிலர் பால் சப்ளையும் உறுதி செய்கிறார்கள். மாடுகளுக்கு இன்ஷூரன்ஸ் செய்து விடுகிறார்கள். இதே போல் விவசாயத் திட்டங்களுக்கும் இன்ஷூரன்ஸ் வசதி உண்டு.

இவற்றில் முதலீடு செய்வதால், நகர வாசிகளான நமக்கு முற்றிலும் தொடர்பு விட்டுப் போன விவசாயம், பால் பண்ணை போன்றவற்றில்

மீண்டும் பங்கேற்கும் (ரிமோட் கன்ட்ரோலில் தான்!) ஒரு சின்ன சந்தோஷம் ஏற்படக் கூடும். ஆனால் நிறுவனங்களின் நம்பகத்தன்மைக்கு 'காரன்டி' இருக்கிறதா....?

''ஷேர் வாங்கினால் மட்டும் என்ன 'காரன்டி'?'' என்று சிலர் கேட்கிறார்கள். இதிலும் கவனம் தேவைதான். கொஞ்ச நாட்கள் முன்பு பொதுமக்களை ஏமாற்ற முயன்ற ஒரு நிறுவனம், 'போலிக் கையெழுத்துப் போட்ட ஷேர் சர்டிஃபி கேட்களைக் கொடுத்துவிட்டு, வேறு சிலர் தங்களையே ஏமாற்றி விட்டதாகச் சொல்லித் தப்பிக்கப் பார்த் தது!

மியூசுவல் ஃபண்டுகள் ரிசர்வ் வங்கியின் கட்டுப்பாட்டில் இருப்பதால் அவற்றில் பயமின்றி முதலீடு செய்யலாம் என்பதை மீண்டும் எடுத்துச் சொல்கிறேன்.

அதே சமயத்தில் 36 சதவிகிதம் வட்டி தருவோரைக் கண்டு மயங்க வேண்டாமென்பதை யும் திரும்பவும் கூறுகிறேன்.

கொஞ்சம் யோசியுங்கள். மார்க்கெட்டில் நல்ல பெயர் வாங்கி பல வருடங்களாக நடக்கும் நிறு வனங்கள் கொடுத்து வருவதைப் போல் மூன்று மடங்கு வட்டியை இந்த 36% நிறுவனங்கள் தரு கின்றன. எப்படித் தர முடியும்? அந்த அளவுக்கு அவர்களுக்கு வருவாய் இருந்தால்தான் தர முடியும்.

ஆக, நாற்பது சதவிகித வட்டிக்கு பணத்தை விட்டுத்தான் நமக்கு 36 சதவிகிதம் தருகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம்.... அவ்வளவு வட்டி தரக்கூடிய சக்தி இந்தியாவில் யாருக்கு இருக்கிறது? எந்தத் துறையைச் சேர்ந்தவர்களுக்கு இருக்கிறது? எந்தத் துறையில் பணம் கோடிக் கணக்கில் புரள்கிறது? அப்படிப்பட்ட துறை ஒன்றே ஒன்றுதான்.....! அதை நான் சொல் லாமலே நீங்கள் கண்டுபிடித்து விடலாம்.... அந்தத் துறைக்குக் கடன் தருவது பாதுகாப்பானதுதானா? யோசியுங்கள்.

(பணம் பெருகும்)

---

## ஏஜ. ஏஜ. ஜோக்!



முதல்வர் (அமைச்சர் செல்வகணபதியைப் பார்த்து) : கொடைக்கானல் ஏழு மாடி ஒட்டல் கட்ட அனுமதியளித்த வழக்கில் சுப்ரீம் கோர்ட் டில் அப்பீல் செய்யப் போறதா சொல்லியிருக் கிறீங்களே, அங்கும் நமக்குக் கண்டனம் தெரி வித்துத் தீர்ப்பு வந்தால் என்ன செய்வது?

செல்வகணபதி : அப்படி நடக்க விடமாட் டோம் மேடம். இப்பவே நானும் கல்வி அமைச் சரும் யோசிச்சு ஒரு அருமையான ஐடியா கண்டு பிடிச்சிருக்கிறோம். அதாவது இனிமேல் ஒண்ணு, ரெண்டு எண்ணும் போது 0,0,0,0,0, 1,2,3,.... அப்படித்தான் எண்ணனும்னு கணக்கை மாத்திடுவோம். எல்லா ஸ்கூல்லயும் இப்படித் தான் சொல்லிக் கொடுக்கணும்னு உத்தரவு போட்டுடுவோம். பழைய 5 வரைக்கும் சைபர்; பழைய 6 தான் இனிமேல் ஒண்ணு; பழைய 7 தான் இனிமேல் ரெண்டு. அதனால 6 வது மாடி தான் ஒண்ணாவது மாடி, 7 வது மாடிதான் ரெண் டாவது மாடி!

◆ ◆ ◆

முதல்வர் : கவர்னர் பிரச்னைக்கு உருப் படியா ஏதாவது யோசனை சொல்லுங்க....

இந்திரகுமாரி : நீங்க 'உம்'னு ஒரு வார்த்தை சொல்லுங்க. நானும் வளர்மதியும் ஒரு பெரிய பொம்பளைங்க பட்டாளத்தை ராஜ்பவனுக்குக் கூட்டிட்டுப் போயி அதை ஒரு வழி பண்ணிட்டு வந்துடறோம்.

கே.ஏ.கே. : ஐயய்யோ.... பின்னால அது பெரிய பிரச்னை ஆயிட்டா?

முதல்வர் : என்ன பிரமாதமா ஆகப் போவுது? மத்திய அமைச்சர் சிதம்பரம் தன்னுடைய காரை யும் தன்னையும் தானே அடிச்சுக்கிட்ட மாதிரி கவர்னரும் அவரோட ஆளுங்களும் எல்லாத்தை யும் அவங்களே உடைச்சுக்கிட்டாங்கன்னு விசா ரணையை முடிச்சுடலாம்!

◆ ◆ ◆

எஸ்.டி.எஸ். : பி.பி.சி.ல கூட நம்ம ஆட்சி யைப் பத்தி தவறா ஏதோ விமர்சனம் பண்ணி யிருக்காங்களாமே, மேடம்....

முதல்வர் : அதை எல்லாம் எப்படி சமாளிக் கிறதுன்னு எனக்குத்தான் தெரியும். 1988 - ல் பி.பி.சி.யின் இப்போதைய தலைவர், நடிகர் தயிர் வடை தேசிகனை அ.தி.மு.க. வில மீண்டும் சேர்த்துக்கணும்னு கேட்டு சிபாரிசு பண்ணினார். அதை நான் ஏற்காததாலதான் இப்படி செய்தி வெளியிடுறாங்கன்னு சட்டசபையிலே சொல்லிட லாம்.

— நாகலை இளவல்

# பழிவாங்கும் படலம்



ராகவ்வுக்கு 'திக்' என்றது. கடவுளே! இவள் எப்படி இங்கு வந்தாள்? எதற்கு வந்தாள்? என்ன செய்யப் போகிறாள்? இத்தனை பெரிய கல்யாண மண்டபக் கூட்டத்தில் என்ன கலாட்டா செய்ய உத்தேசம்?

'மகா ஜனங்களே, இதோ மாலையுடன் வீற்றிருக்கும் திருவாளர் மாப்பிள்ளை என் மாஜி காதலர்; தியேட்டரில், பீச்சில், பார்க்கில், இன்னபிற காதல் சாம்ராஜ்யங்களில் என் கைப்பிடித்து அலைந்தவர், கல்யாணம் செய்து கொள்வதாகச் சொல்லிடபாய்த்து, இப்போது சமர்த்தாக வேறொருத்தியின் சொத்தை மணக்கப் போகிறவர்' - இப்படி ஏதாவது கிளைமாக்ஸ் மாற்றப் போகிறாளா?

ராகவுக்கு வியர்த்தது. நெஞ்சில் திக் திக். சாந்தி தன்னைக் கடைசியாகப் பிரிந்த தினம் - அல்லது தான் பிரித்த தினம் ஞாபகம் வந்தது.

"என்னை விட்டுட்டு, வேறொருத்தியை அடைஞ்சுடுவியா? பார்த்துடறேன்! பெண்ணுன்னா அவ்ளோ கேவலமா ராகவ்? பாண்ட், ஷர்ட் மாத்தற மாதிரி லைஃப் பார்ட்னரை மாத்தற. இல்லை? பார்த்துடறேன்!"

கடவுளே, என்ன செய்யப் போகிறாள்?

முன் வரிசையில் அமர்ந்திருந்தாள் சாந்தி. பட்டுப் புடைவை. பூ. சிரிப்பு. 'ஒண்டிக்கு ஒண்டி... பார்த்துடலாம்' என்கிற மாதிரி பார்வை. கையில் பார்சல். ஐயோ, லவ் லெட்டர்ஸ்?

ராகவ் பதறினான். பக்கத்தில் மனைவியாகப் போகிற ரஞ்சனி. பணக்கார அப்பாவி. விஷயம் தெரிந்தால் 'ஐயோ, பாவி' என்று மண் வாரி தூற்றப் போகிறவள்.

ஐயர் மந்திரங்களை விரட்டிக் கொண்டிருந்தார். இதோ, தாலியை எடுத்து... கொடுத்து...

நிறுத்தப் போகிறாளா... 'நிறுத்துங்க...' - சினிமா மாதிரி உரக்கக் கத்தி நாயனக்காரரை அடக்கப் போகிறாளா... அல்லது போலீஸ்...

மேளம் ஒலிக்க, உச்சக்கட்டப் பீதியில் தாலி கட்டினான் ராகவ்.

அப்பாடி!

பின் எதற்கு வந்திருக்கிறாள்.

"ஹலோ!"

மேடைக்கே வந்து விட்டாள் சாந்தி. கையில் அந்தப் பார்சல்....

**ரவி. கே. சந்திரன்**

"இவங்க...?"

அபத்தமாகக் கேட்கிற புது மனைவியை அடக்கி விட்டு சாந்தியை இழுத்துக் கொண்டு இறங்கி, ஒதுங்கினான் ராகவ்.

"எதுக்கு.. எதுக்கு வந்தே? என்ன செய்யப் போறே?"

"பயந்துட்டீங்களா... ஒரு பெண் வாழ்க்கையைக் கெடுக்கற பாவத்தை நான் செய்ய மாட்டேன் ராகவ். அதுக்குத்தான் நீங்க இருக்கீங்களே! சொன்னேன் இல்லே... உங்களைச் சும்மா விட மாட்டேன்னு... அதான்... அரை மணி நேரம் என்னமா பதறினீங்க.. ஹார்ட் அட்டாக் வந்து போன மாதிரி இல்லை? இந்தக் குறைஞ்சபட்ச தண்டனை கூட இல்லேன்னா எப்படி?"

சிரித்தாள்.

"பைதபை... இது லவ் லெட்டர்ஸ் இல்லை... கிஃப்ட்தான். அந்தப் பெண்ணையாவது சந்தோஷமா வெச்சுக்கங்க... துடைச்சிக்குங்க... மூஞ்சியை... பேயறைஞ்ச மாதிரி இருக்கு!"

சட்டென்று திரும்பிப் போனவளைப் பார்த்தபடியே நின்றான் ராகவ்.

● **இதழாளர் பாரதி/ பா. இறையரசன்/ நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 98/ரூ. 60/-**

பாரதியின் பத்திரிகைப் பணி, நடை, நயம், கொள்கைகள், மாற்றங்கள் - காரணங்கள் என்று ஏராள விவரங்கள் தேடிப் பிடித்துத் தரப்பட்டுள்ளன. பாராட்டுக்குரிய புதிய வரவு.

● **தாயா, தாரமா வேண்டும் உங்களுக்கு?/ வைரம் ராஜகோபால்/ கங்கா-காவேரி, 17, காரியாங்குடி செட்டித் தெரு, நாகப்பட்டினம்-1/ரூ.12/-**

அன்றாட வாழ்வில் அனுசரிக்க வேண்டிய நியமங்களை, சுருக்கமாகச் சொல்லும் முயற்சி.

● **எல்லோருக்கும் மேன்மை எப்படி ஏற்படும்?/சுவாமி ராம் சுகதாஸ்/கீதா பிரஸ், கோரக்பூர்/ரூ. 1.50.**

இறைவனுக்காக, அவன் விரும்பும்படி நம் வாழ்க்கையை வாழக் கற்றுத் தரும் - வலியுறுத்தும் சிறு அரிய நூல்.

● **சென்னை பச்சையப்பன் கல்லூரி சாதனையாளர்கள்/பேரா. கி.சு.கிருஷ்ணசாமி/சூர்யா பதிப்பகம், சென்னை - 10/ரூ.75/-**

பச்சையப்பன் கல்லூரி, பெருமை கொள்ளத்தக்க, அதன் பழைய மாணவர்கள் பற்றிய விவரங்கள் அடங்கிய நூல்.

● **323 'அரசு' பதில்கள்/தமிழ்ப் புத்தகாலயம், சென்னை - 17/ரூ. 20.**

*கே : காமராஜரின் உண்மையான அரசியல் வாரிசு?*

*ப : அரசியலிலும் அவர் பிரும்மச்சாரி.*

*- அமரர் எஸ்.ஏ.பி.யின் 'அரசு' அவதாரத்தில் உதித்த வெகு சுவாரஸ்ய வினா-விடைத் தொகுப்பு.*

● **அன்புள்ள தமிழன்/மாலன்/வானதி பதிப்பகம், சென்னை - 17/ரூ. 30/-**

தமிழர்களுக்கு அமெரிக்காவின் ஒரிஜினல் முகத்தை அறிமுகம் செய்யும் நூல். ரொம்ப அழகான நடை...




● **ஆகாயம் பூமி/உமா சந்திரன்/வானதி பதிப்பகம், சென்னை - 17/ரூ. 32/-**

அமரர் உமா சந்திரனின் கடைசி நாவல். அதிக எதிர்ப்பு இல்லாமல் கைகூடும் ஒரு காதல் கதை. சுவாரஸ்யமான கதைப் போக்கு.

● **சிறந்த இந்தியக் கவிதைகள்/மணிமேகலை பிரசுரம், சென்னை - 17 ரூ. 17/-**

சேர்க்கப்பட வேண்டிய பல கவிஞர்களின் படைப்புகள் விடுபட்டிருப்பினும், சேர்த்தவரை சிறப்பு.

● **முகங்கள் கவனம்/நிஷா/குதிரை வீரன் பயணம், 229, கைலாசநாதபுரம், பட்டுக்கோட்டை - 614 601/ரூ. 15/-**

*நகம் வெட்டி*
*நானாச்சு என்பதை*
*கண்ணீரோடு அறிவித்தன*
*சாப்பாட்டு இலையின்*
*காயங்கள்.*

*- அருமையான புதுக் கவிதைகள்*

## அசோகா ரசிகர்கள்

திருநெல்வேலி என்றதும் 'அல்வா' நினைவுக்கு வருவது போல, திருவையாறு என்றதும் சுவைப்பிரியர்களுக்கு 'அசோகா' தான் நினைவுக்கு வரும். பாசிப்பருப்பு, நெய், சர்க்கரைக் கலவையில் அல்வாவைப் போன்றே தயாரிக்கப்படும் 'ஸ்வீட்' தான் அசோகா! திருவையாறில் தலைமுறை தலைமுறையாக இந்த ஸ்வீட் வியாபாரத்தில் கொடி கட்டிப் பறக்கும் 'ஆண்டவர் அசோகா ஸ்வீட் கடை'யில் நெய் சொட்டச் சொட்ட விற்கப்படும் அசோகாவைச் சுவைப்பதற்கென்றே சுற்றுப்புற கிராமங்களிலிருந்து திருவையாறுக்குத் தினமும் வந்து போகும் ரசிகர்கள் பலர்!

ஈச்சங்குடி, ஜி.உமா.




## ஐந்தாறு பெற்ற ஊர்!

திருவையாறு என்று எப்படிப் பெயர் வந்தது? வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி என ஐந்து ஆறுகளை உடையதால் இப்பெயர் வந்தது. திரு+ஐ+ ஆறு = திருவையாறு!

அப்புறம் இன்னொரு விஷயமும் தெரியுமா? தஞ்சைக் கோவிலில் ஒரே கல்லால் ஆன நந்தி, ராஜராஜன் காலத்தில் நிறுவப்பட்டது அல்ல. அதன் பின்பு வந்த தெலுங்கு மன்னர்கள் காலத்தில் வைக்கப்பட்டது!

திருக்காட்டுப்பள்ளி, இ.கீதா.



## மக்கள் பேச்சு!

"நம்ம புத்தாண்டு ரிலீஸ் படத்தைப் பத்தி மக்கள் என்ன பேசிக்கிறாங்க?"

"விரைவிலேயே டீ.வி.ல போட்டுடு வாங்கன்னு பேசிக்கிறாங்க சார்!"

கவித்தலம், எஸ்.வினோத்பாபு.

நெஞ்சை

## வகுப்புக்குள் வந்த ரயில்வே ஸ்டேஷன்

நான் கும்பகோணம் அரசு மகளிர் கல்லூரியில் புவியியல் துறையில் இரண்டாம் ஆண்டு படிக்கும் மாணவி.

ஒரு நாள் கடைசி நேரப் பாடவேளை நடந்து கொண்டிருந்தது. பாடம் பயங்கர 'போர்'! நாங்கள் தூங்கி வழிந்து கொண்டிருந்தோம். எங்கள் வகுப்பில் மேரி என்னும் மாணவி தினமும் கல்லூரிக்கு ரயிலில் வருபவள். ஆகையால் மேஜையின் மீது தலையை வைத்துக் கொண்டு நன்றாகவே தூங்கி விட்டாள். ஆசிரியையும் கவனித்து விட்டாள். நாங்கள் எவ்வளவு எழுப்பியும் அவள் எழுந்திருக்கவில்லை. கடைசியில் ஆசிரியை அவள் அருகில் வந்து, "டீ, காப்பி, காப்பிடீ!" என்று கத்த அவளும் "ஸ்டேஷன் வந்து விட்டதா?" என்று கேட்டுக் கொண்டே எழுந்ததும் வகுப்பே கொல்லெனச் சிரித்தது. ஆசிரியை உட்பட!

கும்பகோணம், சுதா

## சிறுவன் கேட்ட கேள்வி!

ஒருமுறை எனது நண்பனின் மறைவு காரணமாக எங்கள் வீடே துக்கத்தில் ஆழ்ந்திருந்தது. அப்போது என் அம்மா "பாவி, இறைவன் நல்லவானையே எடுத்



துக்கறானே..." என்றார். அதுகேட்ட என் அக்கா பையன் "காய்கறி வாங்கறப்ப நல்லதாப்பார்த்து நீ எடுத்துக்கறியே... அதுபோலத்தான் சாமியும்!" என்றான். அதுகேட்ட நாங்கள் அத்துக்கத்திலும் சிரித்தோம், சிலிர்த்தோம்.

செருகடம்பூர், சிவ. திருமாவளவன்

## பந்தநல்லூர் தெரியுமா?

தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த பந்த நல்லூரைத் தெரியாதவர்கள் யாருமிருக்க முடியாது. பரதநாட்டியக் கலை தோன்றியதே இங்குதான் என்று தக்க சான்றுகள் உள்ளன. ஒரு சமயம், முருகனும், பார்வதியும் சந்தோஷத்தால் பந்து விளையாடியுள்ளனர்.

அப்போது பார்வதி வீசிய பந்து இங்கு வந்து அணைந்ததால் (ஒதுங்கியதால்) பந்து வந்து அணைந்த நல்லூர் எனப் பெயர் பெற்றதாம். அப்பெயர் தான் காலப் போக்கில் பந்தன்ன நல்லூர் என்றானது. பிறகு பேச்சு வழக்காக மாறி, இன்று பந்த நல்லூர் என்று அழைக்கப்படுகிறது.

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி

## காக்கா வட்டாரம்!

தஞ்சையில் இப்படி ஒரு வட்டாரம்! காக்காய்ப் பிடிப்பவர்கள் காலனியா? இல்லை! மராத்தி மொழியில் காகா என்றால் தந்தையின் சகோதரர் என்று பொருள். மராட்டியர் ஆட்சி இங்கு இருந்தபோது, யாரோ ஒரு முக்கிய பிரமுகர் இங்கு வாழ்ந்திருக்க, மரியாதைக்காக மக்கள் இவர் வாழும் இடத்தை இப்படி அழைத்தார்கள். காலப் போக்கில் 'காகா' மறைய 'காக்கா' பறந்து வந்து உட்கார்ந்து விட்டது.

தஞ்சை - 9, ஆர்.எஸ். ராவ்.

# அள்ளும் தஞ்சை!

## தஞ்சன் பெயரில் தஞ்சாவூர்

குபேரன், ஈசுவரனை வழிபட்ட இடம் தஞ்சாவூர். இவ்வூருக்கு அளகை என்றொரு பெயர் உண்டு. மேலும், பராசர முனிவர் தவம் செய்தபோது, தஞ்சன், தாரகன், தாண்டகன் போன்ற அசுரர்களால் துன்புறுத்தப்பட்டார். அவர் துர்க்கையிடமும், விண்டு விடமும் முறையிட்டார். அதன் பின் அசுரர்கள் அழிக்கப்பட்டனர். அப்போது தஞ்சன் எனும் அசுரன் துர்க்கையிடம், "இவ்வூர் தன் பெயரால் அழைக்கப்பட வேண்டும்" என்று கூற, அன்று முதல், அளகை நகர் தஞ்சன் ஊர், தஞ்சைபுரி, தஞ்சாவூர் என வழங்கப் படலாயிற்று.

வல்லம், இரா. பாலா.

## பசுமைப் புரட்சி!

பசுமைப் புரட்சிக்குப் பாடுபடுகிறார்
அமைச்சர்...
கண்காணாத இடத்திலெல்லாம்
'கஞ்சா' செடிகளைப் பயிரிட்டு...!

அணக்குடி. சீதா

## சேலத்துச் சிரிப்பு!

சேலம் மாவட்ட வாசகர்களே! அடுத்தது உங்கள் முறை!

இப்போது சேலம் மாவட்டத்தில் வசிக்கும் வாசகர்கள் சிரிப்பான அனுபவங்கள், துணுக்குகள், கவிதைகள் ஜோக்குகள், கடிகள் என எதுவானாலும் போஸ்ட் கார்டில் மட்டுமே எழுதி அனுப்பலாம்.

குப்பான சிரிப்புகள் சேலம் மாவட்டக்காரர்களுக்கென நாங்கள் ஒதுக்கும் பக்கங்களில் இடம்பெறும். பிரசுரமாகும் துணுக்குகளுக்குச் சன்மானம் உண்டு.

உங்கள் படைப்புகளின் சுவையை-அதாவது நகைச் சுவையைப்-பொருத்து அதிகபட்சம் நான்கு வாரங்களுக்கு 'இட ஒதுக்கீடு' உண்டு.

தலைசிறந்த படைப்புக்குச் சிறப்புப் பரிசு உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

ஒருவர் எத்தனை துணுக்குகள் வேணுமானாலும் அனுப்பலாம். போஸ்ட் கார்டில் மட்டுமே - 'சேலத்துச் சிரிப்பு' எனக் குறிப்பிட்டு அனுப்புங்கள்.

பேனாவை எடுத்துக் கொண்டு களத்துக்குள் இறங்குங்கள், பார்க்கலாம்....!

-ஆசிரியர்

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? என்னதான் கொலைகளைச் செய்திருந்தாலும் ஒரு மனிதனுக்குத் தூக்குத் தண்டனை கொடுத்தால் அது மற்றொரு கொலையாகிவிடுகிறதே!

! தற்போது The Chamber என்ற, மரண தண்டனையை எதிர்த்து வாதாடுகிற, விறுவிறுப்பான, முதல்தர நாவல் படித்துக் கொண்டிருக்கிறேன். 'ஒரு கொலைக்கு இன்னொரு கொலை பரிகாரமாகாது; மரண தண்டனையை நிறைவேற்றக் கையாளப்படும் முறைகள் அனைத்தும் ரொம்பக் கொடூரமானவை; எந்த மதமும் பழிக்குப் பழியை ஆதரிக்கவில்லை; மரண தண்டனையால் கொலை செய்யப்பட்டவன் திரும்பி வரப்போவதில்லை' என்றெல்லாம் வாதங்கள்: ஆனாலும் என் மனம் மாறவில்லை. "தூக்குத் தண்டனை பெற வேண்டியவனிடம் அனுதாபம் பிறக்கும்போது, அவனால் திட்டமிட்டுக் கொடுமையான முறையில் கொலை செய்யப்பட்டவனையும், நிர்க்கதியாக நிற்கும் அவன் குடும்பத்தையும் எண்ணிப்பார்" என்று ஒரு நீதிபதிக்கு ராஜாஜி வழங்கிய அறிவுரையை என்னால் மறக்க முடியவில்லை. எல்லா கொலைக் குற்றவாளிகளுக்கும் மரண தண்டனை விதிக்கப்படுவதில்லை என்பதும் கவனத்துக்குரியது. ரகவாரியாகப் பிரித்து, தரவாரியாகத்தான் தண்டனை.

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

? "'அடங்கி இருந்தது போதும்; அடக்கு' என்று சொல்லிவிட்டார்கள்!" என்று குமரி அனந்தன் பேசியிருக்கிறாரே...!

! பாவம், அவர் யாரையென்று அடக்குவார்? புரட்சி காங்கிரஸ்காரர்


அரசியல் தரம்....

# சென்னாவை நீக்கி சு.சுவாமியை ஆளுநராக நியமித்தால்..?


....அதல பாதாளம்

களையா? அல்லது வறட்சி (பணத்தில் அல்ல; ஆட்சித் திறனில்) அ.தி.மு.க.வையா?

● ஜி. அர்ஜுன், திருப்பூர்.

? 'ஒரு மனிதனுக்கு ஏற்படும் இகழ்ச்சியானது அவனது மரணத்தைவிட மோசமானது' என பகவத் கீதை சுலோகம் நீதிமன்றத்தில் ஒலித்திருப்பது குறித்து?

! "குற்றம் சாட்டப்படுவது என்பதே இகழ்ச்சி என்றால் எந்த வழக்குமே கோர்ட்டுக்கு வர முடியாது' என்பதை நீதிபதி விளக்கியிருக்கிறார், மறுமுறையும் அதே பகவத்கீதை வரியைக் கூறி. வழக்கைச் சந்தித்துத் தாம் குற்றமற்றவர் என்று நிரூபிக்க முன்வராத போதுதான் இகழ்ச்சி உண்டாகிறது.


எதையும் தாங்கும்....

● எல். கோபாலகிருஷ்ணன், அரக்கோணம்.

? 'மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கான காப்பகத்தை ஆளுநர் மாளிகை அருகே அமைத்தால் குழந்தைகள் மேலும் மனவளர்ச்சி இல்லாமல் போய் விடுவார்கள்' என்கிறாரே இந்திரகுமாரி!

! அவர் ஆளுநரை மட்டும் இழிவுபடுத்தவில்லை; மனவளர்ச்சி குன்றிய பரிதாபத்துக்குரிய குழந்தைகளையும் இதன் மூலம் பரிக


அடங்கியது போதும்!


தூக்குத் தண்டனை!

சித்து, கேவலமாக நடந்து கொண்டிருக்கிறார். காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் சட்டமன்றத்துக்குக் கறுப்புத் துணி அணிந்து வந்ததை, 'ஆட்டோ சங்கர் தூக்கிலிடப்பட்டதற்காக துக்கம் கொண்டாடுகிறார்கள்' என்பதாக மன்றத் தலைவர் வர்ணித்ததும் இவ்வாறே ரொம்ப ரொம்ப ரசனைக் குறைவான கேலியாகும். அ.தி.மு.க. அரசியலின் தரம் அதல பாதாளத்துக்குப் போய்விட்டதை இவை உணர்த்துகின்றன.

● லஷ்மி ராஜா, கரியாக்கவுண்டனூர்.

*? சு. சுவாமியின் பலம் என்ன? பலவீனம் என்ன?*

! வாய்.

● ஆ. க. கிருஷ்ணன், சென்னை.

*? சமீபத்தில் நீங்கள் ரசித்த அரசியல் நகைச்சுவை?*

! "கவர்னர் சென்னாரெட்டி தம்மிடம் தகாத முறையில் நடந்தார்' என்று முதல்வர் குற்றம் சாட்டியுள்ளாரே?" என்ற உங்களது முந்தைய கேள்வியில் இடம்பெற்றுள்ளதே!

● என். சண்முகம், திருவண்ணாமலை.

*? 'படிச்சவன் சூதும் பாவமும் பண்ணினால் போவான் போவான் ஐயோ என்று போவான்' என்ற பாரதி வரிகள் பற்றித் தங்கள் கருத்து...?*

! போய்க் கொண்டிருக்கிறார்கள்!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? "ஜெ.வை ஆட்சியிலிருந்து இறக்கியதும் மொட்டை போடுவேன்" என சு.சுவாமி கூறியுள்ளது பற்றி...?*



• சாணியும் சாரியும்



• 'மொட்டை போடுவேன்!'

! அழகாகத்தான் இருப்பார். (படம் பார்க்க!)

● எஸ். பி. ராஜா, கோபாலசமுத்திரம்.

*? சு.சுவாமி கூட மாறுவேடத்தில் அலைய வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விட்டதே?*

! 'ஜெ' புகழ்வது மாதிரி தமிழக போலீஸின் திறமை அப்படியொன்றும் கொடிகட்டிப் பறக்கவில்லை என்பதை நிரூபித்திருக்கிறார், சுவாமி.

● ஏ. சுகுமார், காட்டுக்கானூர்.

*? அரசுக் கட்டிலில் அமர்ந்தால் பணம் பண்ண பலப்பல வழிகள் இருப்பதாக 'ஜெ' மீதான ஊழல் புகார்ப் பட்டியல்கள் மூலம் தெரிய வருகிறதல்லவா?*

! இதை உணர்ந்துதான் அரசியல் மேதைகள் சொல்லியிருக்கிறார்கள் : 'மக்கள் தேர்ந்தெடுக்கும் நபர் திறமைசாலியாக இல்லாவிட்டாலும் பாதகமில்லை; யோக்கியமானவராக இருக்க வேண்டும்' என்று. காரணம், திறமையைச் சம்பளத்துக்கு அமர்த்திக் கொள்ளலாம். நேர்மையைக் காசு கொடுத்து வாங்க முடியாது!

● முத்துவேணி அரசு, பாம்பன்குளம்.

*? அண்ணாவின் மந்திரிசபை நெடுஞ்செழியன், 'ஜெ' மந்திரிசபை நெடுஞ்செழியன் - ஒப்பிடுக.*

! "தம்பி வா! தலைமை ஏற்கவா" என்ற உன்னத நிலையிலிருந்து, "உதிர்ந்த ரோமம்" என்கிற தரக்குறைவான நிலைவரை அனைத்தையுமே கண்டு, எதையும் தாங்கும் இதயம்!

● எம். இரத்தினவேல், பொன்மலை.

*? 'உச்ச நீதிமன்றத்தை அவமதிக்கும் எண்ணம் எனக்கோ தமிழக அரசுக்கோ கிடையாது' என்று முதல்வர் கூறியுள்ளது...?*

! பக்கெட்டில் சாணி கரைத்து உச்சித் தலைமேல் ஊற்றிவிட்டு 'சாரி' சொல்வதுபோல.

● மாலதி குமாரன், நாகப்பட்டினம்.

*? கேபிள் டி.வி. உரிமையாளர் கூட்டம் எப்படி?*

! ஓர் அரசு வரி விதிப்பதும், குறைப்பதும், நீக்குவதும் நாட்டு நலனை - பொருளாதார வளர்ச்சியைக் கருத்தில் கொண்டுதான் இருக்க வேண்டும். அவ்வாறிருக்க கேபிள் டி.வி. உரிமையாளர் சங்கக் கூட்டத்தினர் நன்றி அறிவிப்பு - பாராட்டுக் கூட்டத்தில் முதல்வர் கலந்து கொண்டது நல்ல முன்னுதாரணம் அல்ல. மேலும் சூப்பர் டூப்பர் நிறுவனமும் ஜெ.ஜெ. டி.வி.யும் கோதாவில் குதித்த பிறகுதான் சலுகைகள்; அதற்குமுன் நீதிமன்றம்வரை சென்று கேபிள் டி.வி. உரிமையாளர்கள் அபரிமித வரிவிதிப்பை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது என்பது ஊர் அறிந்த ரகசியம்.

● எஸ். பழனி, சைதாப்பேட்டை. ☐

*? ஜெ. விருப்பப்படி ஆளுனர் சென்னாவை நீக்கிவிட்டு சுப்பிரமணிய சுவாமியைத் தமிழக ஆளுனராக நியமித்தால் எப்படி இருக்கும்?*

! வாணலியில் வறுபடாமல் தப்பி, நெருப்பிலேயே விழுந்தது மாதிரி 'ஜெ.'க்கு இருக்கும்! அதுசரி, அசத்தலான கேள்வி கேட்டுவிட்டு முழு விலாசம் தராமல் இருக்கிங்களே! சீக்கிரம் அனுப்புங்க.

☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
எஸ். பழனி,
சைதாப்பேட்டை,
சென்னை - 15.

வட்டமேஜை

# ஆணித்தர சுவாமியா? பல்டி சுவாமியா?

♦ "எவ்விதக் குற்றச் சாட்டும் இல்லாமல் தமிழக ஆளுநரை மாற்றினால், பிரதமர் நரசிம்மராவ் பதவியில் இருக்க முடியாது" என்ற சுப்பிரமணியசுவாமியின் பதில் ஆணித்தரமாக இருந்தது. மிக அற்புதம்.
மதுரை-3, ம.மாரிமுத்து.

♦ சாதனையாளர் வரிசையில் சுப்பிரமணிய சுவாமியையும் சேர்த்திருப்பது விந்தை. இவர் சாதனை சாமி அல்ல; சரியான 'பல்டி சாமி'. அன்று சில அற்பக் காரணங்களுக்காக கலைஞரின் ஆட்சியைக் கலைக்கக் காரணமாக இருந்தவர், இன்று அதே கலைஞருடன் சேர்ந்து கொண்டு 'ஜெ'வை எதிர்க்கிறார். நாளை 'ஜெ'யுடன் சேர்ந்து கொண்டு வேறு ஒருவரை எதிர்க்க மாட்டார் என்பது என்ன நிச்சயம்?
தஞ்சாவூர்-5, வனிதா ரவி.

♦ நடிகர் திலகம், நாடுபோற்ற நீடுழிவாழ, வாழ்த்துப்பா வழங்கிய வாலியுடன் சேர்ந்து வாசகர்களும் வாழ்த்துகிறோம்.
சென்னை-30, புளியரை கணேசன்

♦ வன்முறையாலும், அதிகார பலத்தாலும் நீதிமன்றத்தைக் கூட எதிர்க்கத் தயங்காத 'ஜெ'யின் அரசியலுக்கு 'ஜெயா நாயகம்'' என்று பொருத்தமாகத் தலைப்பிட்ட உம்மை பாராட்டிக் கொண்டே இருக்கத் தோன்றுகிறது சார்!
கருமத்தம்பட்டி, அ. இராஜப்பன்.

♦ ஜனநாயகத்தின் தூண்களில் பத்திரிகையும் ஒன்று என்பதைத் தலையங்கத்தின் மூலம் படம் பிடித்துக் காட்டி இருக்கிறீர்கள். உண்மையை உலகுக்கு எடுத்துரைத்த கல்கிக்கு நன்றி! நன்றி!! நன்றி!!!
கோவை, ஏ.ஆர். கணபதி.

♦ விஜய நிலாவின் "ஜூனியர்" சிறுகதையினைப் படித்து முடித்த பின், மஞ்சுளாவின் சூழ்நிலையை, வாழ்நிலையாகக் கொண்டவர்களின் உணர்வுப் போராட்டங்கள் எத்தன்மையானதாக இருக்கும் என்பதைச் சுற்றியே வெகு நேரம் வட்டமிட்டது என் மனம். பிறர் உணர்வுகளை மிதிக்கும் தியாகு போன்றவர்களின் வக்கிரங்களே அவசியம் அழிக்கப்பட வேண்டிய மனித மன அரக்கம்.
காட்டூர், எஸ். அருள்மொழி

♦ எங்கள் அடிகளாரைப் பற்றிய அரிய தகவல்களுக்கு மனம் நிறைந்த நன்றிகள். இன்னொன்று, அடிகளார் அவர்களிடம் ஆட்டோகிராப் வாங்க வேண்டுமென்றால் ஒரு திருக்குறள் சொல்ல வேண்டும்! இளம் வயதில் குன்றக்குடியில் படித்தவன் என்ற முறையில் எங்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தாலும், மாபெரும் இலட்சியவாதி மறைந்து விட்டதில், பெரும் இழப்பையும் உணர்கிறேன்.
அரக்கோணம், எல். கோபாலகிருஷ்ணன்.

♦ 'சாதனையாளர் ஸ்பெஷல்'- இதழின் மகுடமாகத் திகழ்ந்தது 'லதா, மேகலா, கலா' என்ற மூன்று பெண்களின் அரிய பெரிய சாதனை நிகழ்வுகள். பாராட்டுக்கள். இரு சிறுகதைகளும் அற்புதப் படைப்புக்கள்.
திருவிடைமருதூர், ஏ. சிந்து பாரதி.

♦ 'தமிழகத்தின் சுமைதாங்கி யார்?' என்ற கேள்விக்குத் தராசு கொடுத்த பதில் நெத்தியடி! பாவம், ஜெ.வுக்குத்தான் இந்த பதிலை தாங்க முடியாது!
மதுரை-16, வி. பரமசிவம்.

♦ "சதிகாரர்களின் முகத்திரை கிழிக்கப்பட வேண்டும்'' என்பதில், ஜமாத்தே இஸ்லாமி ஹிந்த் அமைப்புக்கு மாற்றுக் கருத்து இல்லை. குண்டு வெடிப்பு மட்டுமின்றி எந்த வன்முறைச் சம்பவத்தையும் நாங்கள் கண்டிக்கிறோம். பல்வேறு சமய மக்களிடம் நல்லிணக்கமே எங்கள் குறிக்கோள். ஆகவே, ஜமாத்தே இஸ்லாமி ஹிந்த், இந்து சமயம் பற்றியும் நமது நாட்டைப் பற்றியும் தரக் குறைவாக, இந்துக்கள் மனம் புண்படும்படி பேசுவதாக திரு. இராம கோபாலன் கல்கி பேட்டியில் கூறியுள்ளதை வன்மையாக மறுக்கிறோம். ஜமாத்தே இஸ்லாமியின் எந்த தலைவராவது தொண்டராவது கடந்த ஐம்பது ஆண்டுகளில் இப்படி பேசியதாகவோ எழுதியதாகவோ ஓர் உதாரணமாவது காட்ட முடியுமா? மாறாக, இராம. கோபாலன் பற்றித்தானே, "நா காக்க" என்று சாவி பத்திரிகை தலையங்கமே எழுத நேர்ந்தது!
சென்னை-12, அப்துல் ஹபீஸ் ரஹ்மானி, செயலாளர், ஜமாத்தே இஸ்லாமி ஹிந்த்,தமிழ்நாடு கிளை.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka